# செந்தமிழ்ச் செல்வி



உள்ளுறை




சிலம்பு-ருக ] வள்ளுவர் ஆண்டு-உ0கஉ, புரட்டாசி Oct. '81 [பரல்-உ

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



## கழகப் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| ஆதித்த நல்லூரும் பொருநைவெளி நாகரிகமும் | 12 | 00 |
| மாமன்னர் | 5 | 00 |
| தமிழ்ப் புலவர் வரிசை - 31 | 5 | 00 |
| நாட்டுப்புறப் பாடல்கள் திறனாய்வு | 11 | 00 |
| இந்தியப் பொருளாதார வளர்ச்சி | 7 | 50 |
| பேச்சிலே விளங்கும் பேரிலக்கியம் | 2 | 25 |
| Sacred Kural – The Kindly light | 15 | 00 |

## விரைவில் வெளிவரும் நூல்கள்

திருவிளையாடல் சொற்பொழிவுகள்

கழக ஆட்சியர் வ. சு. வரலாறு

சங்ககாலத்துப் பிராமிக் கல்வெட்டெழுத்துக்கள்

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ரு௬ | திருவள்ளுவர் ஆண்டு உ௦கஉ, புரட்டாசி அக்டோபர் 1981 | பரல் உ |
| --- | --- | --- |

## தஞ்சை மாநகரில் தமிழுக்கு ஒரு பல்கலைக்கழகம்

இந்திய நாடு விடுதலை பெற்றபின் இந்திய மொழிகளின் வளர்ச்சியில் பெரும் முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளன. குறிப்பாகத் தமிழ்மொழி வளர்ச்சியில் அறிஞர் அண்ணா அவர்கள் ஆட்சியிலமர்ந்தபின் நடத்திய இரண்டாம் உலகத் தமிழ் மாநாடு தமிழ்மக்களிடையே புதிய தமிழுணர்வைத் தூண்டிவிட்டது. அம் மாநாட்டின் பயனாகத் தமிழ்ப் பல்கலைக் கழகங்கள் மூன்றிலும் திருக்குறள் ஆய்வுக்கெனத் தனித் துறைகள் ஏற்படுத்தப் பெற்றன. உலகளவில் தமிழைப் பரப்புவதற்கு ஏற்ற வகையில் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனமும் ஏற்படுத்தப்பெற்றது.

பேரறிஞர் அண்ணா அவர்களின் வழியில் நின்று நாளும் தமிழுக்கு நல்ல பணிகள் பலவற்றை ஆற்றிவரும் தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் அண்மையில் சிறப்பாக நடத்திய ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டின் நினைவாகத் தமிழுக்குப் புதிய, நிலையான தொண்டு செய்ய வேண்டுமெனக் கருதித் 'தமிழ்ப் பல்கலைக் கழகம்' ஒன்றைத் தமிழ் கொழிக்கும் தஞ்சை மாநகரில் பேரறிஞர் அண்ணாவின் பிறந்த நாளான 15—9—81 அன்று தொடங்கி வைத்துள்ளார். அண்ணா அவர்கள் பல்கலைக் கழகங்களில் தனித் துறைகளை ஏற்படுத்தினார்கள். ஆனால் அவர் வழியில் நிற்கும் அவர் தம் அருமைத் தம்பியான தமிழக முதல்வர் அவர்களோ தமிழுக்குத் தனிப் பல்கலைக் கழகமே தொடங்கிவிட்டார்கள். இது தமிழுக்கு

என்றென்றும் நிலைக்கக்கூடிய நிலையான தமிழ்த் தொண்டாகும். இது தவிர உலகத்திலுள்ள பல்வேறு நாட்டுத் தமிழாய்வு செய்யும் அறிஞர்களையும் தமிழ்ச்சங்கங்களையும் இணைக்கும் வகையில் 'உலகத் தமிழ்ச் சங்கத்'தைத் தமிழக முதல்வர் அவர்கள் விரைவில் மாடமலி மதுரை மா நகரில் தொடங்க விருப்பதும் மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

தமிழுக்கெனத் தனிப் பல்கலைக் கழகம் அமைக்க வேண்டுமென்ற எண்ணம் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலேயே ஏற்பட்டது. பாண்டித் துரைத்தேவர் மதுரையில் தமிழ்ச் சங்கத்தைத் தொடங்கியபோது அது தமிழ்ப் பல்கலைக் கழகமாக உருவாகுமென்று எதிர்பார்த்தார். சிதம்பரத்தில் செட்டிநாட்டு அரசர் அண்ணாமலைச் செட்டியார் மீனாட்சி கல்லூரியை அண்ணாமலைப் பல்கலைக் கழகமாக உயர்த்தியபோது அது தமிழ்ப் பல்கலைக் கழகமாகத் திகழ வேண்டுமென்று அவாக் கொண்டார். மேற்கூறிய இருவரும் சாதிக்க முடியாததை இன்றைய தமிழக முதல்வர் அவர்கள் சாதித்துவிட்டார்கள். அதற்காக நாம் அவரைப் பாராட்டுதல் வேண்டும்.

'தமிழுக்கென்று தனிப் பல்கலைக் கழகமா? இஃது என்ன விந்தை! உலகில் வேறு எங்கும் இல்லாத விந்தை!! என்று வியந்தோருண்டு. எல்லாப் பாடங்களையும்போலத் தமிழும் ஒரு பாடம்தானே! அத் தமிழ்தான் தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களில் பாடமாக உள்ளதே! இந் நிலையில் அதற்கெனத் தமிழ்ப் பல்கலைக் கழகம் தேவையா? என்று ஐயமும் வினாவும் எழுப்பியோருண்டு. அவர்களுக்கெல்லாம் பாடமாக அமையும் வகையில் 'தமிழ் என்பது ஒரு பாடம் மட்டுமன்று. தமிழ் என்றால் மொழி, தமிழ் என்றால் ஓர் இனம், தமிழ் என்றால் நீண்ட நெடியதொரு வரலாறு' 'தமிழ் என்றால் உலகப் பண்பாடுகள் அனைத்திலும் தலைசிறந்த தனி நாகரிகம்', என்ற புதிய பாடத்தைத் தமிழக முதல்வர் அவர்கள் புகட்டியுள்ளார்கள்.

தமிழ்மொழியின் உயர் ஆய்வு மையமாகத் தமிழ்ப் பல்கலைக் கழகம் அமையும் என்று அவர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்கள் அதைத்தானே செய்து வருகின்றன? பிறகு இதற்கு ஏன் புதுப் பல்கலைக் கழகம் என்று கேட்கலாம். அப் பல்கலைக் கழகங்களிலெல்லாம் தமிழ் பல்வேறு பாடங்களுள் ஒன்றாக அடங்கி ஒடுங்கிய நிலையில் செயல் படுகிறதே தவிர, தமிழுக்கேயுரிய தனிச் சிறப்புடன் இயங்கவில்லை. எனவேதான் இத்தகைய பல்கலைக் கழகத்தை நிறுவத் தமிழக முதல்வர் அவர்கள் திட்டமிட்டுள்ளார்கள்.

அத் 'தமிழ்ப் பல்கலைக் கழகத்தின்'பால் அமையவுள்ள புலங்களே அதன் தனிச் சிறப்பை எடுத்துக்காட்டும். கலைப்புலம், சுவடிப்புலம், வளர் தமிழ்ப்புலம், மொழிப்புலம், அறிவியல்புலம் ஆகிய ஐந்து புலங்கள் மட்டும் முதற்கண் தொடங்கப்பெறு கின்றன. இவற்றுடன் நின்றுவிடாது என்பது மட்டும் உறுதி. தொடக்கத்திற்கு இவை. இன்னும் போகப் போகப் புதிய புலங்கள் பெருகிக்கொண்டே போகும். தமிழ்மக்களின் மொழி, இன, வரலாற்று, சமய, பண்பாட்டுத் திறங்களை முழுதும் வெளிக் கொணர இன்னும் பல்வேறு புலங்கள் தொடங்கப்பெறும்.

தமிழ்மக்களின் பெருமையை நிலைநாட்டக்கூடிய பல செய்திகள் இன்னும் வெளிவராமலுள்ளன. முடிவு காணப்பெற வேண்டிய சிக்கல்கள் இன்னும் பல உள்ளன.

எடுத்துக்காட்டாகத் தமிழனின் பிறப்பிடம் 'குமரிக்கண்டம்' என்ற உண்மை இன்னும் நிலைநாட்டப்பெருமலேயே உள்ளது. கடந்த அரை நூற்ருண்டாக இது தொடர்பாகப் பேரறிஞர்கள் பலர் பல்வகையான ஆய்வுகளை நடத்தியுள்ளனர். இவற்றை யெல்லாம் தொகுத்து மேலும் ஆய்ந்து உண்மையை நிலைநாட்ட வேண்டும்.

சிந்துவெளி நாகரிகம் தமிழர் நாகரிகமே என்பதைக் கூறி வருகிரும். இதுபற்றிப் பல்வேறு நூல்கள் ஏற்றும் மறுத்தும் கருத்துக்களை வெளியிட்டு வருகின்றன. தமிழ் வரலாற்றுச் சான்ருேர் சிந்துவெளிக்குச் சென்று நேரடி ஆய்வு நடத்தியதாகத் தெரியவில்லை. சிந்துவெளி எழுத்துக்கள்பற்றிய ஆய்வும் இன்னும் தெளிவான உண்மையை வெளிப்படுத்தவில்லை.

தமிழன் தோன்றிய இடம் குமரிக்கண்டமே என்று சிலர் கூற அதனை மறுத்துத் தமிழர்கள் மத்திய ஆசியாவிலிருந்து இங்கு வந்த குடியேறிகளே என்றும் சிலர் கூறிவருகின்றனர். உண்மை எது என்பது இன்னும் புலனாகவில்லை.

தமிழ் எழுத்துக்களின் வரிவடிவங்கள் வளர்ந்த வரலாறு— பிராமி எழுத்துக்கள், தமிழ் எழுத்துக்கள் தொடர்பு போன்றவை ஆராயப்பெற வேண்டும்.

ஆப்பிரிக்க 'நீகிரோ' மக்களுக்கும் திராவிடர்களுக்கும் இனத் தொடர்பு உண்டு என ஆப்பிரிக்க நாடான செனகல் நாட்டு முன்னாள் குடியரசுத் தலைவர் டாக்டர் செங்கோர் கருது கிருர். அது தொடர்பான ஆய்வை அவர்தம் நாட்டிலேயே தொடங்கி உள்ளார். அதனையும் மேலும் ஆராய்தல் வேண்டும்.

இவ்வாறு பல்வேறு நாட்டு அறிஞர்கள் கூடி ஆராயவேண்டிய பல செய்திகள் இன்னும் உள்ளன. தமிழ் இலக்கியம் மிகப் பழைமையானது என்று கூறி வருகிறோம். அதன் வரலாறு ஆங்கிலத்தில் விரிவான அளவில் இன்னும் உருவாகவில்லை. இன்னும் இலக்கிய வரலாற்றில் கால ஆராய்ச்சி பேரிடர்ப்பாடாக உள்ளது. புதிய தமிழ்ப் பல்கலைக் கழகமேனும் தெளிவான சிந்தனையை உருவாக்க வேண்டும்.

தமிழர் வாழ்வு சமயத்தோடு பின்னிப் பிணைந்த வாழ்வு. சமயம் இல்லையேல் தமிழ் இல்லை. சமய இலக்கியமில்லையேல் தமிழ் இலக்கியம் சிறப்பிழந்து விடும். தமிழர் சமய வாழ்வு இன்னும் நன்கு ஆராயப்பட வேண்டியதாகும்.

தமிழர் திரைகடலோடித் திரவியம் தேடும்பொருட்டுப் பல்வேறு நாடுகளுக்கும் சென்று குடியேறியுள்ளனர். அங்கு வாழும் மக்கள் தம்மால் இயன்ற வரை தமிழ் இலக்கிய நூல்களைப் படைத்து வருகின்றனர். இவ்வாறு வெளிநாடுகளில் வளர்ந்து வரும் தமிழ் இலக்கியம் தமிழ்நாட்டுத் தமிழ்மக்களிடையே பரவாமல் உள்ளது. அதனைப் பரப்ப வேண்டியது இன்றியமையாதது.

இவ்வாறு உயர் ஆய்வு நிலையில் ஆராய வேண்டிய பொருள்கள் நிரம்ப உள்ளன. இவற்றையும் இன்ன பிறவற்றையும் புதிதாக அமைந்துள்ள 'தமிழ்ப் பல்கலைக் கழகம்' ஆராய்ந்து புத்தொளி பரப்பும் என்றும் உறுதியாக நம்புகிறோம்.

---

## தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் குறிக்கோள்கள்

இன்றுள்ள பல்கலைக் கழகத் தமிழ்த்துறைகளின் பணியும், அமைந்திருக்கும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் பணியும் சில துறைகளில் பொதுவாக இருந்தாலும், தமிழ்ப் பல்கலைக் கழகம் சில சிறப்பியல்புகளை உடையதாகவும் ஏனைய பல்கலைக் கழகங்களின் பணிகளைத் திரும்பச் செய்யாததாகவும், பிற பல்கலைக் கழகங்களின் தமிழ்த் துறைகளின் வளர்ச்சிக்கு உதவுவதாகவும் அமைதல் முறையாகும். இந்த அடிப்படையில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் குறிக்கோள்கள் வருமாறு :

1. *தமிழ்ப் பல்கலைக்கழகம் ஓர் உயர் நிலை ஆய்வு நிறுவனமாகச் செயல்படும்.*
2. *தமிழகத்துக்கு வெளியே இந்தியாவிலும் பிற நாடுகளிலும், தமிழ் பயில விரும்புவோர்களுக்குப் பயிற்சி அளிக்கும்.*

3. தமிழர் கலை, பண்பாடு, இசை, கூத்து, ஓவியம், சிற்பம், கட்டடம், இலக்கியம், இலக்கணம், மொழியியல், வரலாறு, சமயம், மெய்ப்பொருளியல், நில நூல், திணை நூல், வானிலைக் கோள்கள், கடற்செலவு, சோதிடம், சித்த மருத்துவம், பொறியியல், அறிவியல், கைவண்ணத் தொழில் போன்ற துறைகளை ஆய்ந்து வரன்முறைப்படுத்தும்.

4. பல்கலைக் கழகக் குறிக்கோள்களுக்கு ஏற்ற தொடர்பான பிறமொழி நூல்களைத் தேவைக்கேற்ப மொழிபெயர்க்கும். தமிழில் சிறந்த நூல்களைப் பிற மொழிகளில் மொழி பெயர்க்கும்.

5. ஓலைச் சுவடிகளையும், பழைய அச்சுச் சுவடிகளையும் பேணி வெளியிடும்.

6. தமிழ்மொழி, தமிழ்ப் பண்பாடு, தமிழர் வரலாறு காட்டும் அனைத்துக் கல்வெட்டுக்களையும், பிற சான்றுகளையும் தேடித்தொகுத்து ஆய்வுக் கருத்துடன் வெளியிடும்.

7. தமிழ்மக்களிடையே தமிழகத்திலும் தமிழ் வழங்கும் மற்றை நாடுகளிலும் வழக்கிலிருக்கும் சொற்கள், சொற்றொடர்கள், மரபுச் செய்திகள், தொழில் துறை, உழவுத் துறைச் சொற்கள், அரிய செயல் முறைகள் இவைகளைத் தொகுத்து விளக்கத்துடன் வெளியிடும்.

8. தொன்மையை ஆராயும்போது, இன்றைய அறிவியல் நோக்கோடும், எதிர்கால வளர்ச்சி நோக்கோடும் ஆராயும்.

9. வளரும் உலகின் அறிவுத் துறைகள் அனைத்தையும் தன்னுள் கொண்ட கல்வி மொழியாகத் தமிழ் வளரவும், வளம் பெறவும் ஏற்ற அணுகு முறை, செயல் முறைபற்றி ஆய்ந்து பொருத்த மான செயல் முறைகளை வகுக்கும்.



## மொழியும் வாழ்வும்

தமிழர்கள் தங்கள் மொழியையும் வாழ்வையும் இணைத்துக் கொண்டவர்கள். மொழியைக் கருவி என்று நினைக்காமல், தங்களை வழி நடத்தும் துணைவன்—வழிகாட்டும் வழிகாட்டி—பாடம் கற்பிக்கும் ஆசான்—உள்ளத்து உணர்ச்சிகளை வெளி யிடும் நண்பன் என்று நினைக்கிறார்கள்.

—பேரறிஞர் அண்ணா

## தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர். வி. ஐ. சுப்பிரமணியம்

அண்மையில் தஞ்சை மாநகரில் தோற்றுவிக்கப்பெற்றுள்ள தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக அமர்த்தப் பெற்றுள்ள டாக்டர் திரு. வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் கன்னியாகுமரி மாவட்டம் நாகர்கோயிலைச் சேர்ந்தவர். இவருக்கு அகவை 53. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் முதுகலைப் பட்டம் (எம், ஏ,) பெற்ற இவர் சிலகாலம், திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றினர். 1954ஆம் ஆண்டில் கேரளப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராக அமர்த்தப்பெற்றார். 1955-57ஆம் ஆண்டுகளில் அமெரிக்காவில் டாக்டர் பட்டம் பெற்றார். மீண்டும் 1958 இல் கேரளப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறைத் தலைவர் பொறுப்பினை ஏற்று 1966 வரை அப் பணியில் இருந்தார். 1980 வரை மொழியியல் துறைத் தலைவராயிருந்தார்.



இவர்தம் 'புறநானூற்றுச் சொல்லடைவு' நூல் வடிவில் வெளிவந்துள்ளது. இவர் அனைத்துலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம் உருவாவதற்கு துணைநின்றவர். மூன்று உலகத்தமிழ் மாநாடுகள் நடைபெறுதற்குப் பேருதவியாக இருந்தவர்.

திராவிட மொழியியல் துறையைத் தோற்றுவித்த டாக்டர் சுப்பிரமணியம் அவர்கள் அத் துறையின் கருத்துரைஞராகவும், பொறுப்பாளராகவும் இருந்து வருகிறார். இவர் பல முறை அயல்நாடுகளுக்குச் சென்று வந்திருக்கிறார். அண்மையில் மொழியியல் தொடர்பாகச் சப்பான் நாட்டிற்குச் சென்று செப்டம்பர்த் திங்கள் முதல் நாளன்று தாயகம் திரும்பினர். தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராகப் பதவி ஏற்றிருக்கும் டாக்டர் அவர்கட்கு எங்கள் உளமார்ந்த பாராட்டுதல்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

———

# கொற்கை-2.

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

கொல்லுத் தொழில் வழியாகப்பெற்ற பெயரே கொற்கை என்பதை முன்னர்க் கண்டோம். அதனை நிறுவத்தக்க சான்று களைக் காண்போம்.

கொற்கையில் விநாயகர் கோயில் ஒன்றுள்ளது. அதனைச் 'சுந்தர விநாயகர் கோயில்' என்று வழங்குகின்றனர். 'அக்கசாலை விநாயகர் கோயில்' என்னும் பெயரும் அதற்கு உண்டாம்! குளக் கரையில் வளமாள வயல்வெளியின் ஊடே அமைந்துள்ள அப் பழங்கோயில் எண்ணற்ற கல்வெட்டுகளைத் தன்னிடத்தே கொண் டுள்ளது.

திங்களூரில் அப்பூதியடிகள் அமைத்த தண்ணீர்ப் பந்தலில், "திருநாவுக்கரசெனும் பேர், சந்தமுற வரைந்ததனை எம்மருங்கும் தாம் கண்டார்" என்று சேக்கிழாரடிகள் குறிப்பதுபோல அக்கசாலைப் பிள்ளையார் கோயிலின் எம்மருங்கும் கல்வெட்டுகள்! முகப்புப் பக்கமா? பின் பக்கமா? இடப்பால் வலப்பால் பக்கங்களா? சுவரின் எழுதப் பகுதியா? எப் பகுதியும் உள்ளன கல்வெட்டுகள்! இவை யெல்லாம் படிக்கப்பெற்றனவா? படியெடுக்கப்பெற்றனவா? பதிப்பிக்கப்பெற்றனவா? வரலாற்றுக்கு வளமான குறிப்புகள் இக் கல்வெட்டுகளில் இருக்கும் என்பது உறுதி.

கோயில் வாயிலில் நிற்கிறோம். இதோ...ஒரு கல் பளிச்சிடு கிறது. தெளிவாகப் படிக்குமாறு தீந்தமிழில் அமைந்த கல்வெட்டு: "மதுரோதைய நல்லூர் அக்கசாலை ஈசுவரமுடையார் கோயில் தானத்திற் காக"...கல்வெட்டுத் தொடர்கிறது. கல்லெழுத்தைக் காணும் நாம அக்கசாலை விநாயகர் என்று வழங்கும் பெயரைக் கேட்டுத் திகைக் கிறோம். கல்வெட்டில் 'ஈசுவரர்' என்று இருக்க 'விநாயகர்' பெயரைக் கேட்டு, விநாயகரே வீற்றிருக்கவும் கண்டால் திகைப் படையாமல் இருக்க முடியுமா? பிள்ளையாரை 'ஈசுவரர்' என்று வழங்கும் வழக்கம் இல்லையே!

கருவறைக்குள் எழுந்தருளியுள்ள பிள்ளையாரைக் குனிந்து வணங்கிய அளவில் அமையாமல் நிமிர்ந்து பார்க்கிறோம். நிலை வாயிலின் மேற்கல்லில் 'அக்கசாலை ஈசுவரமுடையார்' என்னும் கல்லெழுத்து விளங்குகிறது! மீண்டும் திகைத்துப் பார்க்கிறோம்.

"திகைப்புடன் பார்க்கிறீர்களே, என்ன?" என்கிறார் அக் கோயில் அறங்காவலர் திரு. சண்முக சுந்தரனார்.

"இது முன்னே ஈசுவரன் கோயிலாக இருந்திருக்கவேண்டும். பின்னே பிள்ளையார் கோயிலாக மாறியிருக்க வேண்டும்" என்கிறோம். சண்முக சுந்தரனார் வியப்படைந்து, "இதோ ஈசுவரர் இருக்கிறார்" என்று காட்டுகிறார். மூலவரைக் கருவறைக்கு வெளியே தள்ளி, மூத்த பிள்ளையாருக்கு இடந்தந்தவர்கள், மூலவரைக் கோயிலுக்கு வெளியேயே தள்ளிவிடாமல், கருவறைக்கு முன்னே இடப்பக்கத்தில் முருகன் வள்ளி தேவயானை ஆகியோர் வரிசையிலேயாவது வைத்தார்களே என்று அமைதியடைகிறோம். அக்காலை ஈசுவரர் கோயில் என்பதன் உண்மை உணர்ந்த உணர்வால் அவ் வீசுவரர் பொன்னார் திருவருளை வியந்து வாழ்த்துகிறோம்.

கோயிலின் முன்னே பெரும் பரப்புடைய குளம் ஒன்று காட்சி வழங்குகின்றது. அது கொடுங்கணி, கொற்கை நிலங்களைப் புரக்கின்றது. நீர் நிரம்பி வழியும் காலத்தே அதனைப் பார்க்க வேண்டும்! பச்சைப் பசேல் என நெல்லும், வாழையும், தென்னையும் இடைவெளியறச் சூழ்ந்து விளங்கும் சூழலின் இடையே, பரந்து கிடக்கும் நீல நீர்ப்பரப்பு எத்தகு எழிற்காட்சி வழங்கும்!

கரைமேல் நின்று காண்கிறோம். குளத்தின் இடையே ஒரு கோயில்! நம் குறிப்பை அறிந்து அன்பர் ஐயாத்துரை, 'செழுவ நங்கை' கோயில் என்கின்றனர். இது 'செழிய நங்கை கோயில்' 'வெற்றிவேல் அம்மை" என்று வழங்குவதும் உண்டு என்கிறார். சிலம்பின் மெல்லொலி நம் செவிக்குள் பட்டுச் சிந்தையுள் அள்ளூறி மகிழ்கிறோம்! ஆம்! ஆம்! "கொற்கையில் இருந்த வெற்றிவேற் செழியன்" பெயர் விளக்கும் அம்மை என்பதை எண்ணி இளங்கோவடிகளார் பொன்னடிகளைப் பூரிப்புடன் நினைந்தேத்துகிறோம்.

கோயிலின் முன்னர் உடைந்து கிடக்கும் சிலைகளைக் காண்கிறோம். கடற்பாசியும் சங்கும் பிறவும் கல்லாகிப் போக அக் கல்லைக் கொண்டே வடித்த சிலைகள், உடைந்து கிடக்கின்றன. அவை பேணுவாரற்றுக, கோயிலின் உள்ளேயும் இருக்க வகையற்று, வெளியில் கிடப்பதைப் பார்த்துத் துன்புறுகிறோம். 'ஒருமுலை இழந்த திருமா பத்தினி' சிலையொன்று முன்னே உடைந்து கிடந்த செய்தியை உள்ளூர் அன்பர்கள் உரைக்கின்றனர். நெக்குருகுகின்றோம். "படைக்கத் திறங் கெட்ட கைகள்,

உடைத்துக் கெடுக்கின்றனவே! இவற்றைத் தடுத்துப் போற்றிக் காக்கவும் நாடு திறனற்றுப் போயிற்றே" என்று நோகின்றோம்.

கோயில் சூழலைப் பார்க்கிறோம். சூழலெல்லாம் பழங் கட்டடப் பகுதிகள்! கட்டடச் சான்றுகள்! பெரிய பெரிய செங்கல் தளங்கள்! ஆழத்தில் பதிந்து கிடக்கும் சுவர்கள்! "இவையெல்லாம் அக்க சாலைத் தெருக்கள்; பதின்மூன்று தெருக்கள் இங்கு இருந்தனவென்று செவிவழிச் செய்தி" என்கிறார் அன்பர் சண்முக சுந்தரம். அக்கசாலை ஈசுவரர் கோயிலுக்கு முன்னுள்ள பரப்பைப் பார்த்து 'இருக்கலாம் இருக்கலாம்' என ஏற்கிறோம். அப்பொழுது குளத்தின் வடபாற் கரையோரம் உள்ள ஊரைக் காண்கிறோம். அதன் பெயரை வினவுகிறோம். 'அக்காசாலை' என்கிறார்கள். அக்கசாலை அக்காசாலை யாகியதை உணர்கிறோம். நமக்குப் பட்டொளி வீசிப் பறப்பது போல உணர்வு ஏற்படுகின்றது. "அந்தோ! பழந்தமிழ்க் கொற் கையே, பாராண்ட கொற்கையே, முத்துப்படு பரப்பின் கொற் கையே, முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையாய் மூத்த கொற்கையே, உலக நாகரிகத்தின் உயர்பெருந் தொட்டிலே, கடல் மகள் கவின் முகமே, வாணிகத்தின் வைப்பகமே, காலத்தின் கோலத்தால் உன் நிலைமை இருந்தவாறு என்னே! என்னே! இந் நாட்டவர் நிலைமைதான் இருந்தவாறு என்னே! என்னே!" என ஏங்குகிறோம்.

ஏக்கம் மாறாத நிலையில் நாம் நிற்க நம் கையை அன்பர் நாராயணர் பற்றுகிறார். தென் பக்கம் அழைத்துச் செல்கின்றார். குளத்தின் தெற்குக் கோடிக்கே கொண்டு செல்கிறாரே! அங்கே கோயில் ஒன்று இருந்த சான்றைக் காண்கிறோம். ஈசுவரர் பீடம் கிடக்கிறது; கோயிலும் அதன் சுற்றும் இல்லை! ஆனால் அவற்றின் அடித்தளம் புதையுண்ட சான்றாகப் புலப்படுகின்றது. "இதன் பெயர்" என்னு முன், 'தென்னகேசர் கோயில்' என்கிறார் நாராயணர். நம் உள்ளத்தில் ஒண்டமிழ் ஒளியூட்டுகின்றது. 'தென் அக்க ஈசுவரர் கோயில்' என்பது புரிகிறதா, என்கிறது 'தென்னகேசுவரர் கோயில்'.

மேற்கே அக்கசாலை ஈசுவரர் கோயில்; வடக்கே அக்கசாலை என்னும் ஊர்; தெற்கே, தென்னகேசுவரர் கோயில்; ஊடே அக்க சாலைத் தெருக்களின் அடித்தளம்; கிழக்கே செழியநங்கை என்னும் வெற்றிவேலம்மை கோயில்! இவற்றையெல்லாம் இணைத்துப் பார்த் ததும் 'இன்னும் ஐயம் என்ன' எனத் தெளிவு பெறுகிறோம். பழங்காலப் பாண்டியர்கள் நாணயம் அடித்த அக்கசாலை இதுவே என்றும், அக் கொல்லுத் தொழிலால் சிறப்புற்ற கொற்கை இதுவே

என்றும் முடிவு செய்கின்றோம். நம் முன்னோர் ஊர்களுக்குப் பெயர் வைத்த பெருமையையும், அப் பெயர்க் காரணியமும் அறிய முடியாமல் தடம் மறைந்துபோன காலக்கேட்டையும் எண்ணுகிறோம். இப்பொழுதில், "அக்கசாலை ஈசுவரர் கோயிலில் பொற்கொல்லரே வழிவழியாக அறங்காவலராக இருந்து வருகின்றனர்" என்னும் செய்தியையும் கேள்விப்பட்டு, அறங்காவலர் சண்முக சுந்தரரைப் பார்க்கிறோம். "ஆம்! உண்மைதான்! நான் பொற்கொல்லர் குடிவழியைச் சேர்ந்தவனே; ஏரலில் காசுக் கடை வைத்துள்ளேன்" என்கிறார். அதே மூச்சில், "இவ் வக்கசாலையில் இருந்து திருநெல்வேலிக்குக் குடிபெயர்ந்து போயுள்ள பொற்கொல்லர்கள், தம் பண்டையூரை மறவாராய் அக்கசாலைத் தெரு என ஒரு தெருவைத் திருநெல்வேலியில் அமைத்துக்கொண்டு வாழ்கின்றனர்; அத் தெரு தொண்டை நாயனர் கோயிலின் வடக்கில் உள்ளது" என்று மொழிகிறார். வள்ளிக் கிழங்கு எடுக்கப்போன வறியவன் ஒருவன் கையில், வயிரமும் மணியும் முத்தும் வளமாகக் கிடைத்தது போல மகிழ்கின்றோம்!

அறிஞர் அ. இராகவன் அவர்கள் எழுதிய 'கோநகர்--கொற்கை' என்னும் நூலைத் திருப்புகிறோம். (கொற்கை) "அஃகசாலையின் பொன் வெள்ளி செம்புக் காசுகள் பல அச்சிடப்பட்டு வந்தன. இந்த அஃகசாலையில் உருவாக்கப்பட்ட காசுகள் பல என்னிடம் உள்ளன" என்று! உரைப்பதுடன், 91 காசுகளை இருபக்கமும் புலப்பட அச்சிட்டும் காட்டியுள்ள அருமையையும் காண்கிறோம். கைம்மேல், கிடைத்த கனியெனச் சான்றுண்மை கண்டு களிகூர்கின்றோம்! "தத்துநீர் வரைப்பிற் கொற்கை", "முத்துப்படு பரப்பிற் கொற்கை", "பாண்டியன் புகழ்மலி சிறப்பிற் கொற்கை," "நற்றேர் வழுதி கொற்கை", "மறப்போர்ப் பாண்டியர் அறத்திற் காக்கும் கொற்கை", "பேரிசைக் கொற்கை", "கலிகெழு கொற்கை" எனச் சங்கச் சான்றோரோடும் கூடிநின்று பாடுகிறோம்.

(தொடரும்)

———

## தமிழைப் புறக்கணிப்பது பெருங் குற்றமாகும்

*தமிழ்ப் பற்றுளர்கள் எத்தகைய இடர்ப்பாடுகள் நேரிடினும் தம்முடைய தமிழ்ப்பற்றை விட்டுக்கொடார். தமிழினால் நான் பெற்ற அறிவு அந்த மொழியின் அழகையும் வளத்தையும் பாராட்டச் செய்கிறது. அந்த மொழியைப் புறக்கணிப்பது எனக்குப் பெருங் குற்றமாகத் தெரிகிறது.*

—காந்தி அடிகள்.

# பாவாணர் கனவிய தமிழ்ப் பல்கலைக் கழகம்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

அறிஞர் அண்ணா அவர்களை நடமாடும் பல்கலைக் கழகம் என்று அழைத்தது போலவே மொழிஞாயிறு பாவாணர் அவர்களைச் செந்தமிழ்ப் பல்கலைக்கழகம் என்று தமிழுள்ளங்கள் தொழுதன. அரை நூற்றாண்டுக்கும் மேலாக அன்னைத் தமிழில் ஆய்வுகள் நடத்தி அனைத்துலகத் தாய்மொழி முதன்மை செந்தமிழ்க்குச் சொந்தமெனச் சிந்தையில் தெளிவுண்டாக்கிய மொழி நூல் மூதறிஞர், தமிழ் வளர்ச்சி முழுமைபெறத் தனித்த தமிழ்ப் பல்கலைக் கழகம் தோன்றவேண்டுமெனக் கனவினார் (கனாக்கண்டார்). பகுத்தறிவுப் பகலவனாக விளங்கிய தந்தை பெரியாரிடம் முதன் முதல் இக் கருத்தை வலியுறுத்தினார். தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் 21 திரவிட மொழிகளும் கற்பிக்கப்பட்டால்தான் திரவிட இன ஒற்றுமை கால்கொள்ளும்; மொழியாராய்ச்சி வரலாற்றுப் பின்னணியில் வலிவுறும், என்றெடுத்துக் கூறினார்.

தந்தை பெரியார் காலத்திலேயே தமிழ்ப் பல்கலைக் கழகம் அரும்பி மலர வேண்டும் என்று பாவாணர் கண்ட கனா இன்று நனவாகியுள்ளது தமிழக அரசுக்குத் தமிழுள்ளங்கள் தலை தாழ்த்தி வணங்கி மனங்குளிர நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளன. எனினும், நன்றி செலுத்தும் உள்ளங்களில் ஓர் ஐயுறவும் தோன்றாமலில்லை. பாவாணர் எண்ணிய எண்ணங் களின் அடிப்படையில் புதிய தமிழ்ப் பலகலைக் கழகத்தின் செயற் பாடுகள் அமையுமா என்பதே அந்த ஐயுறவு.

உலக மொழிக் குடும்பங்களிடையில் தமிழ் கொண்டுள்ள தாய்மை உறவை வரலாற்று மொழிநூலடிப்படையில் நன்கு ஆராய முடியும்; ஒப்பீட்டு மொழிநூலடிப்படையில் வலிவுற நிறுவிக் காட்ட முடியும். ஆயின், வண்ணனை மொழிநூலடிப் படையில் தமிழின் தொன்மை, முன்மை, தாய்மை, தலைமை ஆகிய வற்றை ஆராய முடியாது. தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் வண்ணனை மொழி நூலுக்கு அறவே இடந்தராமல் வரலாற்று மொழி நூல் ஒப்பீட்டு மொழி நூலாராய்ச்சிகளுக்கு மட்டும் இடந்தர வேண்டும் என்பது பாவாணரின் முதற் குறிக்கோள்.

தமிழ்ப் பல்கலைக் கழகம் ஆற்ற வேண்டிய சில இன்றியமை யாத பணிகளைத் 'தமிழிலக்கிய வரலாறு' என்னும் நூலில் (பக். 310-312) பின் வருமாறு கூறுகிறார் :

1. உண்மையான தமிழ் வரலாறு, தமிழ் இலக்கிய வரலாறு, தமிழ் நாட்டு வரலாறு ஆகிய மூவரலாறும் விரிவாக எழுதப்பெறல் வேண்டும்.

2. இசை, நாடகம், கணியம், ஐந்திறம் (பஞ்சாங்கம்) சிற்பம் முதலிய பழந்தமிழ்க் கலைகளைத் தக்க அறிஞரைக் கொண்டு தனித்தமிழில் எழுதுவிக்க வேண்டும்.

3. முருகன் வழிபாடு, சிவன் வழிபாடு, திருமால் வழிபாடு, அம்மன் வழிபாடு ஆகிய நால்வகை வழிபாட்டு முறை களையும், அவற்றிற்குரிய போற்றி (அருச்சனை)களையும் தனித்தமிழில் தொகுத்து, ஓதுவாரைக் கொண்டு திருக்கோவில் வழிபாடு நடத்துவித்தல் வேண்டும்.

4. தமிழையும் 21 திரவிட மொழிகளையும் ஆராய்ச்சி முறையிற் கற்பிக்க ஏற்பாடு செய்தல் வேண்டும்.

5. தொல்காப்பிய வுரைகள் பலவிடத்து வேறுபட்டும், சிலவிடத்து வழுவியும், இக்கால மாணவர்க்கு எளிதாய் விளங்காத நடையிலும், இருப்பதால், இலக்கணப் பெரும்புலவரை யெல்லாம் ஒன்று கூட்டி, ஒரே புதிய திருந்திய விளக்கமான தெளிநடை விரிவுரை வரை விக்க ஏற்பாடு செய்தல் வேண்டும்.

6. மேலையறிவியல் கம்மியக் குறியீடுகளை யெல்லாம் மொழி பெயர்க்கவும், அவ்வப்போது வேண்டிய புதுச்சொற் களைப் புனையவும், அறிவியல் திறவோரும் தனித்தமிழ் வல்லுநரும் கொண்ட ஒரு நிலையான குழுவை அமர்த்தல் வேண்டும்.

7. தமிழ்மொழி, இலக்கியம், நாகரிகம், பண்பாடு, வரலாறு முதலியவற்றை உலகெங்கும் பரப்புமாறு, ஒரு சுற்றுலாக் குழுவையும் தோற்றுவித்தல் வேண்டும்.

8. ஐந்திணை நிலமும் அறுதிணைப் போரும் பெயர்பெறக் காரணமாயிருந்த பூச்செடி கொடி பூண்டு மரங்களை, ஒரு பூங்காவில் வளர்த்துப் பொருட்காட்சியமாக்கலாம். முப்பு (மூவுப்பு) முறை தெரிந்த தமிழ்மருத்துவர் யாரேனுமிருப்பின், தேடிக் கொணர்ந்து போற்றிக் காக்கலாம்.

9. இன்று தமிழிலுள்ள பெரிய அகரமுதலி தமிழ்ப் பகைவரால் தொகுக்கப்பட்டு அடிப்படைத் தமிழ்ச் சொற்களையெல்லாம் வடசொல்லென்று காட்டியிருப்பதால், தென் சொற்கட்கெல்லாம் பொருள் கூறுவதோடு வேர்ப்பொருள் காட்டித் தமிழென விளக்கும் சொற்பிறப்பியல் அகரமுதலி இன்றியமையாததாகின்றது. இதற்கு ஒரு கோடி உருபா வேண்டினும் ஒதுக்கித் தொகுப்பிப்பது, தமிழரசின்மேல் விழுந்த தலையாய கடமையாகும்.

'தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்', 'சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழித்தல் வேண்டும்' என்று பாரதி பாடினாலும் அந்தத் தமிழ் முழக்கம் தனித்தமிழ் முழக்கமாக அமைந்தால்தான் தமிழ் தழைக்கும்; இன்றேல் எத்துணை அரும்பாடுபட்டுப் பெரும்பொருட் செலவிடினும் தமிழ் தழைக்காது, செழிக்காது, இதனைக் கடந்த கால வரலாறே காட்டும், என்று பாவாணர் தெளிவுபடுத்தியுள்ளார். வடசொல் மிகுந்த மணிப்பவள நடை வளர்ந்த காலத்தில் தமிழ் தளர்ந்தது. மணிப்பவள நடையிலமைந்த கட்டுரையை மீண்டும் தமிழாக்கிப் பதிப்பிக்கவேண்டிய நிலையேற்பட்டிருப்பதே இதனை வலியுறுத்தும். இதனை மனத்திலிருத்தித் தமிழ் வளர்க்கும் பணியில் தமிழ்ப் பல்கலைக் கழகம் ஈடுபட வேண்டும். உலகிலுள்ள ஏனை மொழிகளில் பிறமொழிச்சொற்களைச் சேர்க்கச் சேர்க்க வலிவு மிகும். தமிழைப் பொறுத்தவரை பிறமொழிச் சொற்களை விலக்குமளவுக்கு வலிவும் பொலிவும் மிகும்.

———

## ஈடு இணையற்ற தமிழ்க் காப்பியங்கள்

*நான் ஓர் ஆந்திரன் என்ற முறையில், தமிழில் உள்ள சிலப்பதிகாரம் மணிமேகலை என்னும் இரு பெருங்காப்பியங்களுக்கு ஈடான வேறு இலக்கியங்கள் தெலுங்கில் இல்லை என்பதை அறிந்து தமிழ்மீது பொறாமைப்படுகிறேன். மொழிபெயர்க்கப்பெற்ற நிலையிலேயே அவை இத்துணைக் கவர்ச்சியாக உள்ளன வென்றால் மூல நூல்கள் எப்படியிருக்குமோ?*

— சி. ஆர். ரெட்டி

(Foreword to the Ancient Dravidians
by T. R. Sesha Iyengar, p. xvii)

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியைத் தொகுப்பது எப்படி?

[பன்மொழிப் புலவர் மு. சதாசிவம், எம். ஏ., எம். லிட்., டிப். லிங்.,]

தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுக்கும் திட்டம் ஏறத்தாழப் பத்தாண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பெற்றது. பத்தாண்டுகளுக்குள்ளேயே முடிக்கப்பெற்றிருக்க வேண்டிய இப் பணி பத்தில் ஒரு பங்கு கூட முடியப்பெறாத நிலையில் மொழிப் பேரறிஞர் திரு. தேவநேயப் பாவாணர் அவர்கள் மறைந்து விட்டார். திரு. பாவாணர் அவர்களுக்குச் சமமான அறிஞர் யாரும் இல்லாமையின் அவ்வகரமுதலித் திட்டத்திற்கு மூடுவிழாச் செய்துவிட வேண்டுமென்று சில 'நல்ல' தமிழ் உள்ளங்கள் விரும்பினாலும், இவ்வரிய திட்டத்தைக் கைவிடாமல் தொடரு கின்ற தமிழக அரசினைப் பாராட்டுதல் வேண்டும். கிடைத்தற் கரிய மொழிப் பேரறிஞர் வாய்த்திருந்தும், பத்தாண்டுகளாகியும், சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுத்து முடியாமற் போனதற் கான கரணியங்களை ஆராய்ந்துகொண்டிருப்பதினும், இனிச் சில ஆண்டுகளில் அப் பணியை முடிப்பது எப்படி என்பதில் கவனஞ் செலுத்துதலே பயன்மிகு செயலாகும்.

கழக இலக்கியச் செம்மல், நல்ல தமிழறிஞர் திரு. இரா. இளங்குமரன் அவர்கள் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுப்பதற்கு வேண்டிய அறிவுரைகளை அண்மையில் 'செந்தமிழ்ச் செல்வி' இதழ்களின் வாயிலாக விளக்கமாகக் கூறியுள்ளார். சில மாதங்கட்கு முன்பு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடை பெற்ற அகராதிப் பயிற்சி வகுப்பில் கலந்துகொண்ட யானும் என் பட்டறிவுக்கேற்ற சில கருத்துக்களைத் தமிழறிஞர் முன்பு வைக்க முனைகின்றேன்.

### சொற்பிறப் பகர முதலியின் பயன்

சொற்பிறப்பியல் அகர முதலி அல்லது வேர்ச்சொல்லகராதி என்பது ஒவ்வொரு சொல்லின் மூலத்தையும், சொல்லாக்கங் களையும், சொல்லின் வளர்ச்சியையும்பற்றிக் கூறுவதாகும். இச் சொற்பிறப்பியல் அகரமுதலி மற்ற அகராதிகளைப்போலப் பொதுமக்களுக்குப் பயன்படுவதொன்றன்று; அறிஞர்களுக்கும் ஆராய்ச்சியாளருக்குமே பெரிதும் பயன்படுவதாகும். இவ்வகர முதலி தமிழின் உண்மைநிலைகளையும், தமிழின் இயல்புகளையும்,

காலந்தோறும் அது பெற்றுவரும் ஆக்கங்களையும் உணர்வதற்கு இன்றியமையாததொரு கருவிநூலாகப் பயன்படும். மேலும் புதுச் சொல்லாக்கங்களுக்கு வழி காட்டும் மூல நூலாகவும் பயன் படும்.

## தமிழில் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுத்தவர்கள்

ஆங்கிலம், பிரெஞ்சு, செருமன், இத்தாலியன் முதலிய ஐரோப்பியப் பெரு மொழிகளில் சொற்பிறப்பியல் அகர முதலிகள் (வேர்ச் சொல்லகராதிகள்) வெளிவந்துள்ளன. உயர் தனிச் செம்மொழியான தமிழுக்கு இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஈழத்து நல்லறிஞர் தவத்திரு ஞானப்பிரகாச அடிகளார் 'சொற் பிறப்பு ஒப்பியல் அகராதி' ஒன்றைத் தொகுக்க முற்பட்டார். ஆனால் அவரால் ஒரு பகுதி தான் தொகுத்து வெளியிட முடிந்தது.

இவ்வகராதி தொகுப்பதற்குப் பல மொழிகளின் அறிவும், மொழியியலறிவும், அகராதித் தொகுப்பறிவும், பொறுமையும் இன்றியமையாது வேண்டப்படுகின்றன. தவத்திரு ஞானப்பிரகாச அடிகளாருக்குப் பின்னர் இவ்வகராதியைத் தொகுப்பதற்குரிய ஆற்றல் வாய்ந்தவர் மொழிப் பேரறிஞர் பாவாணர் அவர்களே. அரசு போதிய ஊக்கம் கொடுக்காமையினாலோ என்னவோ அவரும் அகராதியில் ஒரே ஒரு மடலந்தான் எழுதி முடித்திருக் கிறார். தமிழின் பெருமைகளைத், தனிச் சிறப்புகளை உலகுக்கு உணர்த்தும் இவ்வகர முதலியை முற்ற முடியச் செய்யவேண்டு மாயின் முழுத்தகுதி பெற்ற பன்மொழி அறிஞர் ஒருவரின் தலைமையின் கீழ் ஒவ்வொரு துறையிலும் வல்ல அறிஞர்களின் குழுவை ஏற்படுத்தி அறிவியல், மொழியியல் இவற்றின் அடிப் படையில் இவ்வகராதியைத் திட்டமிட்டுத் தொகுத்து முடித்திடல் வேண்டும். சரியான திட்டஞ் செய்தலும் (planning), அரசின் கண்காணிப்பும் ஊக்கமும் இல்லையெனின் எத்திட்டமும் வெற்றி யுறாது என்பதற்கு இதுவே ஓர் எடுத்துக் காட்டாகும்.

திரு. இரா. இளங்குமரனவர்கள் சொற்பிறப்பியல் அகர முதலிக்கு வேண்டிய புறநிலைகளை விளக்கியுள்ளதால் யான் ஈண்டுச் சில அகநிலைகளைமட்டும் கூற விழைகின்றேன்.

1. சொற்பிறப்பியல் அகர முதலியை வெறும் ஊகங்களின் அடிப்படையில் உருவாக்கக் கூடாது. முற்காலங்களில் வேர்ச் சொல்லகராதி ஓர் அறிவியல் துறை நூலாகக் கருதப்படவில்லை. ஏனெனில், 'A sound etymology has nothing to do with sounds' என்ற அடிப்படைக் கொள்கையை முற்கால வேர்ச்சொல்

லகராதிகள் கடைப்பிடிக்கவில்லை. ஆனால் மொழியறிவு வளர்ந்துள்ள இக்காலத்தில் வேர்ச்சொல்லியல் ஓர் அறிவியலாகவே கருதப்படும் நிலை ஏற்பட்டுள்ளது.

ஒவ்வொரு மொழியிலும் சொற்களின் ஒலிகள் காலந்தோறும் மாறுவதில் ஓர் ஒழுங்கு முறை உண்டு என்பதை மொழியியலறிஞர்கள் கண்டுபிடித்துள்ளனர். ஒவ்வொரு மொழியும் தமக்கெனத் தனியமைப்பைக் கொண்டவையாதலின், ஒரு மொழியில் ஏற்படும் ஒலி, சொல், பொருள் மாற்றங்கள் யாவும் அம் மொழியின் பொது அமைப்பைச் சிதைக்காத வண்ணம் நிகழ்ந்து வருகின்றன. இத்தகைய சொற்பிறப்பியல் விதிகளை உணர்ந்து போற்றி அவற்றின் அடிப்படையில், அறிவியல் நெறியில் இவ்வகர முதலியைத் தொகுக்க வேண்டும். காலப் போக்கில் சொற்களின் உச்சரிப்பு எப்படி மாறி வந்துள்ளது என்பதையும் குறிக்கவேண்டியிருத்தலின் மொழியியலறிஞர்களே இதைச் செவ்வனே செய்ய முடியும்.

2. சொற்பிறப்பியல் அகராதி என்பது ஒவ்வொரு சொல்லின் முதல் நிலையை, ஆதி உருவத்தைக் கண்டுபிடித்துப் பின் அச் சொல்லுருவம் காலந்தோறும் மாறுபட்டுக்கொண்டு வருவதையும், அவற்றின் பொருளும் வேறுபட்டுக்கொண்டு வருவதையும் வரலாற்று முறையில் தொகுத்துக் குறிப்பிடுதலின், ஒரு வகையில் பார்த்தால் அஃது ஒரு வரலாற்றகராதியாகவும் கருதப்படுதற்குரியது. ஆகலின் இவ்வகராதி தொகுப்பதற்குத் தமிழ் நூற்கடல் முழுவதையும் நீந்தியாக வேண்டும்; சங்ககாலம் முதல் இக்கால எழுத்தாளர்கள் வரை எழுதியுள்ள நூல்கள் அனைத்தையும், பார்த்தாக வேண்டும். இதற்கு நீண்ட காலம் பிடிக்குமாகலின் தனியொருவர் எவரும் தம் காலத்திற்குள்ளேயே இவ்வகராதியை முற்ற முடியச் செய்யமுடியாது போகிறது. மேலை நாடுகளில் அகராதிகள் யாவும் அறிஞர் பலரின் கூட்டு முயற்சியால் தோன்றுவதுபோலவே இவ்வகராதியும் அறிஞர் பலர் ஆர்வத்துடன் ஒருமுகமாக உழைப்பதன் மூலம்தான் செவ்விதின் உருவாக முடியும்.

(தொடரும்)

---

## அறிவு நூலும் கலையும்

*அறிவு நூலும் கலையும் உலக முழுமைக்குமே உரியன.*
*அவற்றின்முன் நாட்டு எல்லைகள் மறைந்துவிடுகின்றன.*

— கேதே.

# கொந்துகோலும் வேதினமும்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

நான் களப்பணி ஆராய்ச்சி செய்வதற்காகப் புதுவை மாநிலத்தில் உள்ள மங்கலம் என்ற சிற்றூருக்குச் சென்றிருந் தேன். அங்கு ஒரு சிறிய ஐயனர் கோயிலைக் கண்டேன். கோயிற் பூசாரியைக் கேட்டபோது ஐயனர் பெயர் மிளகப்பன் என்று கூறினர். பெயர் வந்த வரலாற்றையும் கூறினர்; மங்கலம் என்ற ஊரிலே சுங்கச் சாவடி இருந்ததாம். ஒரு தடவை ஒரு வணிகன் மிளகுப்பொதிகளைப் புதுச்சேரியில் விற்பதற்காக எடுத்துச் சென்றபோது பிரெஞ்சு எல்லையைக் கடப்பதற்கு முன் மங்கலம் என்ற ஊரிலிருந்த சுங்கச் சாவடியில் பொதிகளைக் காட்ட வேண்டுமாம், மிளகுப்பொதி என்று கண்டால் சுங்கவரி மிகுதி யாகக் கட்ட வேண்டுமாம். அதனல் மங்கலத்தில் இருந்த ஐயனரை வேண்டிக்கொண்டதனல் சுங்கச்சாவடியில் மிளகுப் பொதிகள் உளுத்தம்பயற்றுப் பொதிகளாக மாறித் தெரிந்ததாம். புதுவை சென்றதும் அவை மிளகாகிவிட்டதால் அதைப் பெரும் பணத்திற்கு விற்று ஐயனருக்கு நன்றிக்கடனக வணிகன் கோயில் கட்டினனும். அதிலிருந்து மிளகப்பன் என்ற பெயர் வந்ததாம். இத்தகைய சுங்கந்தவிர்த்த ஐயனரைக் காரைக்கால் பகுதியில் திருமலைராயன் பட்டினத்தில் பார்த்திருக்கிறேன். மங்கலத்தில் கூறிய மிளகுக் கதையே அங்கும் கூறப்படுகின்றது. திண்டி வனம் புதுவை நெடுஞ்சாலையில் இருக்கும் கிளியனூரிலும் பழைய ஐயனர் கோயில் உள்ளது. அந்த ஐயனரை மிளகய்யனர் என்றழைக்கின்றனர். பிரெஞ்சுக்காரர் காலத்தில் மிளகு வணிகத் திற்கு மிகுந்த சுங்கவரி கட்டவேண்டியிருந்தது. சங்ககாலத் திலும் மிளகிற்கு மிகுந்த சுங்கவரி கட்டவேண்டியிருந்ததால் வணிகர்கள் கவர்த்த வழிகளில் எடுத்துச் சென்று சுங்கவரியைத் தவிர்த்தனர் என்று கூறப்பட்டுள்ளது.

மங்கலத்தில் ஐயனர் உருவம் கருங்கல்லால் ஆனது, கோயில் சிறியது. அதனல் குனிந்து உள்ளே சென்று மங்கிய மாலைக்காலத்தில் பார்த்தபோது ஐயனர் கையில் உள்ள கருவி தெளிவாகத் தெரியவில்லை. அதனல் பூசாரியைக் கேட்டபோது ''ஐயனர் கையில் இருப்பது கொந்துகோலுங்க'' என்று சொன் னதும் வியப்படைந்தேன். கொந்துகோல் என்ற வழக்கு செந் தமிழ் வழக்காகும். இன்றும் நாட்டார் வாயில் வழங்குகின்றது.

ஆனால் படித்தவர்கள் வாயில் அங்குசம் என்ற வடமொழிப்பெயர் தான் வழங்குகின்றது. தோட்டி என்ற பெயர் இலக்கியத்தில் அங்குசத்திற்கு வழங்கும் தமிழ்ப்பெயராகும். ஆனால் கொந்து கோல் என்ற செந்தமிழ்ப் பேச்சுவழக்கை நிகண்டுகளிலோ, அகராதிகளிலோ, இலக்கியத்திலோ காணமுடியவில்லை. ஐயனா ருக்கு முன் கல்லில் ஆன யானை இருந்தது; ஆதலின் ஐயனார் கையில் கொந்துகோல் இருந்தது பொருத்தமானதே.

கோல் என்ற பெயர் விலங்குகளை அடக்கும் கருவி என்ற பொருளில் பேச்சுவழக்கில் கொந்துகோல் என்ற பெயரில் பயின் றுள்ளது. புதுச்சேரி மாநிலத்தில் வழங்கும் இந்தப் பேச்சு வழக்கின் மரபைச் சங்ககாலத்தில் காண்பது வியப்பாக உள்ளது.

"சிறுகோ லுளையும் புரவி ..............." —புறம் 3?2

"சிறுகோற் சென்னி ஆரேற்று அன்ன" —நற்றிணை 265

இந்த இரு பாடல்களிலும் 'சிறுகோல்' என்ற கோல் குதிரையைச் செலுத்த உதவும் முட்கோலைக் குறித்ததாகும். பழைய உரை யாசிரியர்கள் கூறிய உரைப்படி பார்க்குங்கால் சிறுகோல் என்ற பெயர் குதிரைச் சாட்டையையே குறித்ததாகும். "நாயகரும், மணியக்காரரும், குதிரைமேலிருந்து கோல் தா என்றால் மத்திகைக் கோலம், சுள்ளற் கோலாம்" என்று இளம்பூரணர் கூறிய உரையைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். உரையாசிரியர் இளம்பூரணர் வாழ்ந்த காலத்தில் நாட்டுப்புற ஊர்களின் ஆட்சிப் பொறுப்பை நடத்தியவர்கள், நாயகர், மணியக்காரர் என்ற பட்டப் பெயர்களைத் தாங்கினர். பின்னர்ச் சில சாதியினர் அந்தப் பெயர்களைத் தங்களுடைய சாதிப் பெயர்களாக மாற்றினர். அப்படித்தான் கிராமணி என்ற சாதிப்பெயரும், நாயக்கர் என்ற சாதிப்பெயரும் வந்துள்ளன. கோல் என்ற சொல் கருவி, ஆயுதம் என்ற பொருளில் சங்க காலத்திலிருந்து இன்று மங்க லத்தில் வழங்கும் பேச்சுவழக்கு வரையில் பயின்றிருப்பதைப் பார்க்கும்போது இன்றும் செந்தமிழ்ப் புலமை பெறாத நாட்டார் மக்கள் வாயில் வழங்குவதைக் காண்கிறோம். அந்த வழக்குகள் நாளிதழ் வழக்குகளால் அழிந்து வருகின்றன. அவற்றைப் பாதுகாத்தால்தான் செந்தமிழ் தழைத்திடும். இல்லையென்றால் நலிந்து நச்சுத் தன்மையுடைய நாளிதழ்த் தமிழ்தான் வளரும்.

"குறுங்கோ லெறிந்த நெடுஞ்செவிக் குறுமுயல்" —புறம் 339

நெடுஞ்செவிக்குறுமுயலைக் கொல்ல வளைதடியைப் பயன்படுத்திய தாகப் புறநானூறு கூறுவதைக் கவனிக்க வேண்டும். இந்தக்

கோல் ஆத்திரேலியாவில் மக்கள் விலங்குகளைக் கொல்லப் பயன் படுத்திய Boomerang என்றழைக்கப்பட்ட, சென்று திரும்பிவரும் கோலை ஒத்தது என்பதையும் கவனிக்கவேண்டும். வேட்டையிலும் போரிலும் பயன்படுத்திய கருவிகளை, ஆயுதங்களைக் 'கோல்' என்றழைப்பது பண்டைத் தமிழிலக்கிய மரபாகும். மிகப் பண்டைக் காலத்தில் விலங்குகளை அடக்க மரத்தினுல் ஆன கோலைத்தான் பயன்படுத்தியிருக்க முடியும். ஆதலின் கோல் என்ற பெயர் நீண்ட நெடுங்காலத்திய வரலாற்று மரபு உடையது என்பதை அறிய வேண்டும்.

கொந்துகோல் என்ற வழக்கில் கொந்து என்ற சொல் கொந்துவது, கொத்துவது என்ற பொருளில் வழங்கினதாகும். வளைந்த கூரிய கருவியான அங்குசம் யானைக்காதைக் கொத்து வதற்காகவே அமைந்துள்ளது. ஆதலின் கொந்துகோல் என்று அங்குசத்தை அழைத்தது அரிய செந்தமிழ் வழக்காகும். சம்பந்தர் பாடிய திருவாரூர்ப் பதிகத்தில்,

> *'தந்தையார் போயினுர் தாயாரும் போயினுர்*
> *தாரமும் போவார்*
> *கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றூர்*
> *கொண்டு போவார்''*

என்று வரும் பாடல் வரிகளில் கொந்தவேல் என்ற பெயர்ச்சொல் கொந்துகோல் என்று நாட்டார் மக்களுடைய பெயர் வழக்கோடு ஒத்திருப்பதைக் காண்கிரேம். 'கொந்து' என்ற சொல் தமிழிலக் கியத்தில் முதலில் சிறுபஞ்சமூலத்தில் 'தண்டித்தல்' என்ற பொரு ளில் வழங்கியுள்ளது. ஆதலின் யானையைத் தண்டிக்கும் கருவி கொந்துகோல் என்று நாட்டார் வாயில் வழங்கப்பட்டது அருமை யான செந்தமிழ் வழக்காகும்.

'வேதினம்' என்ற பெயர் கருக்கரிவாளைக் குறித்ததாகும். இந்தப் பெயர் சங்க நூல்களில் ஒரே ஒரு நூலில் மட்டும் பயில் கின்றது.

> ''வேதின வெரிநி னோதி முதுபோத்து'' —*குறுந்தொகை-140*

சங்க இலக்கியத்திலும் பிற்கால இலக்கியத்திலும் ஒரே ஒரு பாட்டில் காணப்படும் இந்த அரிய இலக்கியப் பெயர் இன்று தமிழில் காணப்படவில்லை. ஆனுல் மலையாள மொழியில் வழங்கும் ''தெற்கம் பாட்டுகளில்'' இந்தச் சங்கப் பெயர் வழங்குகின்றது வியப்பானதாகும். மலையாள மொழியில் 'வடக்கன் பாட்டுகள்' என்ற நாட்டுப்பாடல்கள் சிறப்பானவையாகும். ஆனுல்,

அண்மையில் 'தெற்கன் பாட்டுகள்' என்ற மலையாள மொழி நாட்டுப் பாடல்கள் நூலாக வந்துள்ளது. இந்தத் தெற்கன் பாடல்கள் முக்காற் பங்கு தமிழாகவே உள்ளதைக் கவனிக்க வேண்டும். மலையாளம் மட்டும் தெரிந்தோர் இந்த நாட்டுப் பாடல்களைச் சரிவரப் புரியமுடியாது, தமிழும் மலையாளமும் தெரிந்தோர்தாம் நன்கு புரியமுடியும். சங்க இலக்கியம், பழந் தமிழ் இலக்கியம் ஆகியவற்றில் காணப்படும் பெயர் வழக்குகளை ஆராய மலையாளத்தில் வழங்கும் பேச்சு மொழிச் சொற்கள் நன்கு உதவும். விடக்கு என்ற சொல் தமிழில் பேச்சுவழக்கில் வழங்க வில்லை. ஆனால் விடக்கு என்ற சங்ககால வழக்கு மலையாளத்தில் இன்றும் வழங்குகின்றது. இத்தகைய சங்ககாலப் பழைய வழக்கு களை வைத்துக்கொண்டு தமிழைத் தாய்மொழியாகவும், மலையா ளத்தைப் பேச்சுமொழியாகவும் கொண்டிருந்த மகாகவி உள்ளூர் பரமேஸ்வர ஐயர் என்ற புலவர் மலையாளமொழி தமிழ் மொழிக்குத் தமக்கை என்று பொருத்தமான சான்றுகளின்றிக் கூறினர். ஆனால் வெளிநாட்டுக்காரரான கால்டுவெல் ஐயர் தமிழ்மொழிக்கும் மலையாளமொழிக்கும் உள்ள உறவைப்பற்றிக் கூறியதே மிகப் பொருத்தமானதாகும். கேரளத்தில் வழங்கிய தூய தமிழ் வடமொழியாளரின் தாக்கத்தால் கலப்புமொழியான மலையாளமாக மாறியது. ஆயினும் அப்போதும் தூய தமிழ் வழக்குகள் காப்பாற்றப்பட்டுள்ளன. இன்றும் கேரளத்தில் வழங்கும் ஊர்ப்பெயர்கள் தூய தமிழ்ப்பெயர்களாகவே உள்ளன. அப் பெயர்கள் தமிழ்நாட்டிலும் இன்றும் வழங்குகின்றன. ஊர்ப்பெயர் ஆராய்ச்சியில் பல உண்மைகளைக் காணலாம். கல்வெட்டுகளிலும் பண்டை ஊர்ப்பெயர்கள் வழங்கியுள்ளன.

மலையாள மொழியில் கிருஸ்திய கானங்களில் 'மார்க்கம் களிப்பாட்டு' என்ற பாட்டுத் தொகுதியின் முதல் பாட்டில் 'வேத்யனம்பு' என்ற சொல் வழங்கி வருகின்றது. இந்த வேத்ய னம்பு என்ற வழக்கு 'வேதினம்பு' என்று இருக்க வேண்டும். வேதினம் என்ற சொல் நற்றிணையில் கருக்கரிவாளைக் குறித்த தாகும். கருக்கரிவாளைப்போல இரம்பமுள் உடைய அம்புகள் உண்டு. இந்த அம்பை எய்தித் தூய தோமையாரைக் (St. Thomas) கொன்றதாகச் செவிவழிக் கதை கூறுகின்றது. மலையாளப்பாட்டு தமிழில் கீழே காட்டப்படுகின்றது:

"மெய்க்கணிந்த பீலியும் மயில்மேல்த் தோந்தும் மேனியும்
பிடித்த தண்டும் கய்யும் மய்யும் எங்ஙனேக்கும் வாழ்கவே
வாழ்க வாழ்க நம்முடைய பரிஷயெல்லாம் பூமிமேல்
வழிகூருய் நடக்க வேண்டி வந்தவரே நாமெல்லாம்

*அழிவுகாலம் வந்துடுத்து அலயுந்ந ஜின்மக்களெ*
*அழியாய் வண்ணம் காத்தருள்வான் கழிவுயேசு*
*[மார்த்தோம்மான்''*

*''மலமேன் நிந்நு வேத்யனம்பு சாத்தி எந்நபோல்*
*மைல்மேலேறி நின்ற நிலகாணவேணம் பந்தலில்*
*பட்டுடன் பணிப்புடவ பவிழமுத்து மாலயும்*
*அலங்கரிச்ச பந்தலில் வந்தெழுந்தருள்க மார்த்தோம்மான்*
*அலங்கரிச்ச பந்தலில் வந்தருள்தரேணம் மார்த்தோம்மான்!''*

மேற்கண்ட பாட்டில் தூய தோமையாரை 'மார்த்தோம்மான்' என்று விளித்திருப்பதைக் காணலாம். மலேயாளத்தில் கூறிய விளக்கத்தில் மைலாப்பூர் மலேயில் வைத்து மார்த்தோம்மான் அம்பெய்தி இறந்தார் என்பதை உணர வேண்டும் என்று கூறப் பட்டுள்ளது. மெய்க்கணிந்த பீலியும், மயில் மேல்தோற்றும் மேனியும் என்று 'யேகமார்த்தோம்மானே' வர்ணித்திருப்பதைக் கவனிக்க வேண்டும். மைல் (மயில்) மேலேறி நின்ற நிலே காண வேணும் என்ற மலேயாளப் பாட்டு வரிகளில் மயிலாப் பூருடன் தூய தோமையாரை நெருக்கமாகத் தொடர்புபடுத்திக் கூறும் செவிவழிச் செய்திகள் தெளிவாகத் தெரிகின்றன. தமிழ் நாட்டில் சில கிறித்துவர்களிடையே மயிலே எய்த வேடன் அம்பு தவறித் 'தூய தோமையாரை'க் கொன்றதாகக் கூறுவர். மயிலாப் பூரில் இன்றும் தூய தோமையார் ஆலயம் உள்ளது. கடற் கரைக்கருகில் இருக்கும் இந்த ஆலயம்தான் தேவாரத்தில் கூறப் பட்ட பழைய கபாலீசுவரர் ஆலயம் என்று தெரிகின்றது. இந்த ஆலயத்தருகில் பழைய கபாலீசுவரர் ஆலயத்தின் தூண்களேப் போன்ற பொருள்கள் கிடைத்துள்ளன. மயிலாப்பூரில் உள்ள கிறித்துவக் கோயிலிலும் மற்றும் உள்ள பழைய கிறித்துவக் கற்சிற்பங்களிலும் இரண்டு மயில்களுக்கிடையே சிலுவை காணப் படுகின்றது. மயிலாப்பூர் தேவாரத்தில் 'மயிலாப்பூர்' என்ற சிறந்த துறைமுகமாக இருந்தது. இந்தத் துறைமுகம் சங்க காலத்திலேயே இருந்ததாகவும் தெரிகின்றது. தூய தோமை யார் கி. பி. ஒன்ரும் நூற்ருண்டில் சேர நாட்டிலிருந்து மயிலாப்பூர் வந்து இறந்தார் என்று செவிவழிச் செய்தியுள்ளது. கேரளத்தில் தூய தோமையார் உயர்ந்த சாதி இந்துக்களே மதம் மாற்றினுர் என்று கூறுவர். அவர்கள் இன்று மார்த்தோம்மான் கிறித்து வர்கள் என்று பிரிந்து இருக்கின்றனர். ஆனுல் தூய தோமை யார் மயிலாப்பூரில் இந்துக்களேக் கி. பி. ஒன்ரும் நூற்ருண்டில் மதம் மாற்றியதற்குச் சான்றுகள் இல்லே. ஆனுல் பதினரும், பதினேழாம் நூற்ருண்டு செவிவழிச் செய்திகள் அவ்வாறு கூறு கின்றன. அவற்றின் உண்மையை எண்பிக்க முடியவில்லே.

ஆனால், பழங்காலத்திய கிறித்துவர்கள் வீட்டுக் கதவுகளில் கஜலட்சுமி என்ற செதுக்கு வேலைப்பாட்டிற்கு ஈடாக இரண்டு மயிலும் நடுவில் சிலுவையும் இருந்ததை நான் பார்த்திருக் கின்றேன். அது மயிலாப்பூருடன் தோமையாரைத் தொடர்பு படுத்தி இணைத்த செவிவழிச் செய்தியால் வந்தது என்பது உண்மையாகும். அதனால்தான் மலையாளப் பாட்டில் 'மெய்க் கணிந்த பீலியும் மயில்மேல் தோன்றும் மேனியும்,' என்று மயில் மேலேறி நின்ற நிலை காண வேண்டும் என்று மயிலுடன் இணைத்துத் தோமையாரவர்களைப்பற்றிப் பாடியுள்ளனர். இன்றும் மயிலாப்பூரில் மயில்கள் ஆர்ப்பு இல்லை. ஆனால் 25 ஆண்டு களுக்கு முன்பு தேவகோட்டையில் விடியற்காலையில் நான் பல மயில்களார்ப்பைக் கேட்டிருக்கின்றேன். பல வீடுகளில், கூரை களில் வீட்டுமயில்கள் வாழ்ந்தன. சங்க நூல்களில் காட்டு மயில்கள் கூறப்பட்டுள்ளன. பழனமஞ்ஞை என்று வயல் மயிலுங் கூறப்பட்டுள்ளது. இன்று தமிழகத்தில் பழனமயிலைப் பார்க்க முடியாது. ஆனால், இன்றும் ராஜஸ்தானில் பழனமயில்களைக் காணலாம். அவ்வாருகவே சங்க காலத்திலும் தேவாரம் பாடப் பட்ட காலத்திலும் மயிலாப்பூரில் மயில்கள் ஆர்த்திருந்தன என்பதில் ஐயமில்லை. அதனால்தான் மயிலாப்பூர் என்ற பெயர் வந்தது. மயிலைத் தொடர்புபடுத்திய அந்தப் பெயர் பண்டைக் கிறித்துவர்களிடையே தூய தோமையாருடன் இணைக்கப்பட்டுத் தோமையாருடைய செவிவழிச் செய்தியான வாழ்க்கை வரலாறுகள், பதினைந்து, பதினாரும் நூற்ருண்டுகளில் தமிழ்க் கிறித்துவர்களிடையேயும் மலையாளிகளிடையேயும் வழங்கியது. அவ்வாறு வழங்கினதிலிருந்து தோன்றிய ஒரு மலையாள நாட்டுப் பாடலில் 'வேதினம்' என்ற அரிய அழகிய சங்ககால வழக்கு மலையாள நாட்டுப் பாட்டில் காணப்பட்டது மிகமிக வியப்பான தாகும். வேதினம் என்ற பெயர் நிகண்டுகளில் காணப்படு கின்றது.

கொந்துகோல் என்ற புதுவை மாநிலப் பேச்சு வழக்கும், வேதினம் என்ற மலையாள நாட்டார் வழக்கும் பழந்தமிழ் இலக்கிய மரபில் வந்தவை என்பதைக் காணும்போது வியப்பு மேலிடுகிறது.

———

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[கோ. முத்துப்பிள்ளை]

## 2. COURTESY CALL

நன்ருகக் கல்வி கற்ற நண்பர் ஒருவர் வெளியூரிலிருந்து வந்திருந்தார். பல செய்திகளைப் பெருங்கிளர்ச்சியோடு பேசிக் கொண்டிருந்தார். அவருடைய ஆர்வமிகு பேச்சுக்களிடையே, அவர் சொன்னர், "நான் எங்கள் ஊரைச் சேர்ந்த அமைச்சர் அவர்களைச் சென்று காண விழைகின்றேன். அவர் என்னுடன், ஒன்ருகக் கல்வி பயின்றவர்." இதைக் கேட்டவுடன், "அமைச்ச ரிடம் பேசுவதற்கு ஏதேனும் முக்கிய செய்திகள் உளவோ" என்று நான் வினவினேன். "ஒன்றுமில்லை. வெறும் Courtesy call" என்று அவர் விடை கூறினர். உடனே நான் "Courtesy call என்பதற்குத் தமிழ் என்ன?" என்று கேட்டேன். "அடடா, நான் அதைப்பற்றி இதுவரை சிந்தித்ததே இல்லையே" என்று பளிச்சென்று பதில் கூறினர். அதன் பின்னர்ச் சிறிதுநேரம் இருவரும் மாறி மாறிப் புன்னகை புரிந்தோம்! ஆனல் தமிழ் தெரியவில்லை!

courtesy என்னும் சொல்லை எடுத்துக்கொள்வோம். பிறரை மதித்து இனிமையாகப் பேசுவதுதான் courtesy. courteous behaviour என்னும் தொடரை "நயமான நடத்தை" என்று மொழி பெயர்க்கலாம். By courtesy of the Archaeological Survey of India என்று வரும்போது, "நன்றி, இந்தியத் தொல் பொருள் ஆய்வுத் துறை" என்று எழுதிவிடுகின்ருேம். எனவே இந்தச் சொல்லுக்கு இடத்திற்கு ஏற்ப, பொருள் வேறுபடுவதைக் காண்கின்ருேம். எனினும் இதற்கு இன்னெரு அடிப்படையான பொருளும் உண்டு. அதுதான் "அன்பு" என்பதாகும்.

call என்னும் சொல் பல்வேறு வகையாகப் பயன்படுத்தப் பட்டு வருகின்றது. ஆங்கிலத்தில் "short visit" என்று சொல் வார்கள். நோயுற்றிருக்கும் ஒருவரைச் சென்று காண்கின்ருேம். இத்தகைய நேரங்களில் call என்னும் சொல்லுக்குப் "பார்த்து வருதல்" என்னும் பொருள் பொருந்துகின்றது. Telephone call என்று சொல்லும்போது, "தொலைபேசி அழைப்பு" என்று மொழி பெயர்க்கின்ருேம். Trunk call என்று சொன்னலோ, "நெடுந் தொலை அழைப்பு" என்று மாற்றியமைக்கின்ருேம். calling bell என்ருல் "அழைப்பு மணி" என்று எளிதில் சொல்லிவிடலாம்.

வீடுகளில் calling bell பொருத்தப்பட்டிருப்பதைக் காண்கின்றோம். அலுவலகங்களில், அலுவலர்களின் அறைகளில், அழைப்பு மணிகள் இருக்கின்றன. அறைக்கு வெளியே அமர்ந்திருக்கும் ஏவலர்களை அழைப்பதற்கு அந்த மணிகள் பயன்படுகின்றன. ஓய்வுபெற்றவுடன் calling bell இல்லாத காரணத்தால், கவலையால் தாக்குண்டு, காலனுக்கு இரையாகிவிட்ட அலுவலர்களின் கதைகள் நிறைய இருக்கின்றன! காலனும் calling bell ஐப் பயன்படுத்துவதாக அல்லவோ தெரிகின்றது!

அன்பைப் புதுப்பித்துக்கொள்ள, ஆர்வத்தைப் பெருக்கிக் கொள்ள, ஆய்வுரைகளைப் பரிமாறிக்கொள்ள நிகழ்வதுதான் courtesy call.

இந்தச் சமயத்தில்தான், இன்னொரு சொல்லைப்பற்றி எண்ணிப் பார்க்க வேண்டும். அதுதான் Interview என்னும் சொல். உயர்வை நாடுவோர் அனைவருடனும் உறவாடும் சொல்லாகும் இந்தச் சொல். குறிப்பாக, வேலை தேடுவோரின் நாவிலே நடமாடும் நறிய சொல் இது. தாளிகை (பத்திரிகை) உலகம் இந்தச் சொல்லை மிகவும் பழுதாக்கிவிட்டது! "பேட்டி" என்று எழுதுவது அவர்களின் வழக்கமாக உள்ளது. இந்த ஒலி நம் செவிகளுக்கு இசைந்து வருவதில்லை. Interview என்னும் சொல்லிற்கு, "நேர் காணல்" என்னும் பெயர்ப்பை நம் மூத்த அறிஞர்கள் ஆக்கித் தந்துள்ளனர். Interview time என்றால் "சந்திக்கும் நேரம்" அன்று! நேர் காணல் நேரமாகும். "நேர் காணல் நேரம்" என்று வாய்விட்டுச் சொல்லிப் பார்த்தால், தமிழின் இனிமை தெற்றென விளங்கும்.

Courtesy என்னும் சொல் "அன்பு" என்னும் பொருள் பெறுவதைக் கண்டோம். Call என்னும் சொல்லின் பொருளையும் நன்கு தெரிந்துகொண்டோம். இனிமேல் நமக்குத் தேவை அரை நொடிப் பொழுதுதான்! Courtesy Call என்பது "அன்புக் காணல்" என்னும் அழகிய வடிவம் பெறுவதைக் கண்டு களிக்கலாம்.

கையில் விண்ணப்பம் ஒன்றை ஏந்திக்கொண்டு யாரையேனும் காணச் சென்றால் அது "அன்புக் காணல்" ஆக முடியாது. "கோரிக்கைக் காணல்" என்றுதான் ஆகிவிடும்! தேடிவராமல் நாடிவந்த கதையாக முடிந்துவிடும். அன்புக்காக மட்டுமே ஆன்றோர்களை நாம் கண்டு மகிழ்வோமாக!

Courtesy Call = அன்புக் காணல்.

———

# தமிழ் வளர்ச்சிக்கு அரசு செய்யவேண்டியன

**[புலவர் வி. பொ. பழனிவேலனர்]**

இன்றைய தமிழக அரசு தமிழ் வளர்ச்சிக்கெனச் செய்து வரும் பணிகள் பலவாகும். தஞ்சையில் தொடங்கவிருக்கும் தமிழ்ப் பல்கலைக் கழகம் அவற்றிற்கு "முத்தாய்ப்பு", வைத்தது போன்றதாகும்.

ஆயினும், நடைமுறையில் சில வழுக்கல்களும் இருக் கின்றன.

தமிழ் நாட்டில் பல தமிழ்க் கல்லூரிகள் உள்ளன. ஆண்டு தோறும் பலர் தமிழ்ப் புலமை பெற்று வெளியேறுகின்றனர். பலர் தமிழாசிரியர் பயிற்சியும் பெறுகின்றனர். தமிழ் பயின்று, தமிழாசிரியர் பயிற்சியும் முடித்த பல்லாயிரவர் பணியின்றி வாடு கின்றனர். ஆனால், அஞ்சல்வழியும், தனியேயும் பலர் படித்துத் தமிழாசிரியராகி விடுகின்றனர். தமிழ்க் கல்லூரிகளில் சேர்ந்து படித்துப் பட்டம் பெற்றவர்கட்கு வேலை கிடைக்கவில்லை.

காட்டாக: இந்தக் கல்வியாண்டில் 500 தமிழாசிரியர்கட்கு வேலை வாய்ப்பு அளிப்பதாக அரசு அறிவித்திருந்தது. கல்லூரியில் படித்தவர் 100 பெயர்க்குக் கூட இடம் கிடைக்கவில்லை. பணிகனி லிருந்துகொண்டே அஞ்சல் வழியும், தனிப்பட்ட முறையிலும் படித்தவர்கட்கே அவ்விடங்கள் கிடைத்துள்ளன. அவர்கள் முன்னர்ப் பணியாற்றிய இடங்கள் யார்க்குக் கிடைத்தன? இடை நிலையாசிரியர், ஓவிய ஆசிரியர், உடற்கல்வி ஆசிரியர், கைத் தொழில் ஆசிரியர் ஆகியோர்க்கே கிடைத்தன. உயர்ந்த ஊதியம் கிடைப்பதினுல் குறுக்கு வழிகளில் தமிழ் பயின்று தமிழாசிரியராகி விடுகின்றனர். கல்லூரிகளில் பயின்ற பலர்க்குப் பணிகளும் கிடைக்கவில்லை; அகவையும் குறியளவைக் கடந்து விடுகிறது. என்று அவர்க்குப் பணி கிட்டும்?

வேலைவாய்ப்பு அலுவலகத்தில், தேறிய ஆண்டுக் கணக்கின் படி பணியளிக்கிறோம், என்கின்றனர். ஆனுல், முன்னுல் தேறிய பலிருக்கப் பின்னுல் தேறியவர் பணியிலிருக்கின்றனரே! அஃதெங்ஙனம்? என்பது எமக்குப் புலனுகவில்லை.

இன்று தமிழ்நாட்டில் தமிழின் நிலைமை எவ்வாறுளது? தமிழ்நாட்டில் உள்ள பல ஊர்களின் பெயர்கள் தமிழில் இல்லை; தமிழ்நாட்டு மக்கள் பெயர்களில் 99 விழுக்காடு தமிழில் இல்லை; தமிழ்நாட்டிலுள்ள கடைகளின் பெயர்கள் பல தமிழாக இல்லை; பிற தொழில் நிறுவனங்களின் பெயர்களும் தமிழில் இடப்பட

வில்லை; அரசப் பணிமனைகளில் எல்லாத் துறைகளிலும் தமிழ் வழக்கிற்கு வரவில்லை.

தமிழ்நாட்டுப் பள்ளிகளில்—தொடக்கப் பள்ளி முதல் மேனிலைப் பள்ளி முடிய—பயிலும் மாணாக்கர், மாணாக்கியர் பலர்க்குத் "தமிழ்" என்றுகூடச் சொல்லத் தெரியவில்லை; "தமில்" என்றே செப்புகின்றனர்.

எனவே, தமிழ்நாட்டில் தமிழ் களி நடம் புரியவேண்டுமாயின், தமிழ்ப்புலமை பெற்றவர்களையே அனைத்து அரசுப் பணிமனைகளிலும் வேலைக்கமர்த்தல் வேண்டும்; தொடக்கப்பள்ளி ஒவ்வொன்றிற்கும் ஒரு தமிழாசிரியர் அமர்த்தம் செய்தல்வேண்டும்; தமிழ்நாட்டில் உள்ள எந்த நிறுவனமாயினும் முதலில் தமிழில் பெயர் எழுதி, அடுத்த படி வேற்று மொழியில் எழுதுமாறு ஆணையிடல் வேண்டும்; தமிழ் நாட்டு அரசுப்பணிமனைகள் அனைத்திலும் எல்லா நடவடிக்கைகளும் தமிழிலேயே நடைபெறல் வேண்டுமென்று வற்புறுத்தி ஆவன செய்தல் வேண்டும்; தமிழ்நாட்டில் வாழும் மக்கள் யாவரும் தம் பெயர்களைத் தமிழில்தான் இட வேண்டுமென்றும்; வேற்று மொழியிலுள்ள தமிழ்நாட்டு ஊர்ப்பெயர்களை யெல்லாம் தமிழாக்க வேண்டுமென்றும் கட்டளையிடல் வேண்டும்.

தமிழ்ப்பற்றும், தூய தமிழறிவும், ஆங்கில அறிவும் உள்ள ஆராய்ச்சி அறிஞர்கள் குழு ஒன்று அமைத்து வேற்று மொழிச் சொற்களையெல்லாம் தமிழாக்கம் செய்தல் வேண்டும். தமிழ்க் கல்லூரிகளில் சேர்ந்து படித்தவர்கட்கே தமிழாசிரியர் பணி அளித்தல் வேண்டும். அஞ்சல் வழியும், தனியாகவும் தமிழ் படித்தவர்கட்குத் தமிழாசிரியர் பணி தவிர்த்த பிற பணிகள் அளிக்கப் படல் வேண்டும்.

எல்லா அரசுத் திணைக்களங்களிலும் தமிழ் நடை முறையில், நல்ல முறையில், கையாளப் படுகின்றனவா? என்று கண்காணிக்க நல்ல தமிழறிவுள்ள—தமிழ்ப்பற்றுள்ள சிலரையே அமர்த்தல் வேண்டும்.

தமிழாசிரியர் வேலைக்குப் படித்துள்ள—படிக்கின்ற அனைவர்க்கும் தமிழ்நாட்டில் தவறாது பணியமர்த்தம் அளித்தல் வேண்டும். தமிழ்வழிப் படித்துப் பட்டம் பெற்றவர்கட்குத் தமிழக அரசப் பணிகளில் முதன்மையிடமளித்தல் வேண்டும்.

இங்ஙனம் செய்தால்தான் தமிழ்நாட்டில் தமிழ் வளம்பெற வாய்ப்புண்டாகும். அரசு தமிழுக்காகச் செலவிடும் பணமும் கருதிய பயன் தரும்.

———

# "வவ்விறு மொழிகள்"

[புலவர் இரா. கிருட்டிணன் (இராகி) பி. லிட்.]

(பரல்-க, சகூஆம் பக்கத் தொடர்ச்சி)

*"தாவி னவ்பொன் றைஇய பாவை"

என்கிறது அகம்.

## 'கவ், வவ்'

தொல்காப்பியர், எழுத்ததிகாரத்தின் மொழி மரபில், மொழி யிறுதி எழுத்துகளைக் கூறுமிடத்து, [25]"உயிர் 'ஔ'எஞ்சிய இறுதியாகும்" என்று பொதுவிதி கூறியதோடு [26]"கவவொடு இயையின் ஔவும் ஆகும்" என்றார். ஈண்டு, 'இயைந்து' என்னாது இயை'யின்' என ஐந்தாம் வேற்றுமை உருபு கொடுத்து [27]'ஒப்புப் பொருளில்' கூறியமையால், 'கௌ, வௌ' என்பன, 'கவ், வவ்' என்றிருத்தல் வேண்டும் போலும் என்று எண்ணத் தோன்றுகிறது.

கவ்—ஒப்பு—கௌ; வவ்—ஒப்பு—வௌ.

"ஔவும் ஆகும்" என்ற உம்மையான், 'வவ்வுமாகும்' என்பதும் உறுதிப்படுகிறது. இக்கால மொழிநூலறிஞர் கூறுவது போல 'ஒலி இயலின்' ஒப்புமை கருதி, நுண்ணிதின் உணர்ந்து, வியக்கும் வகையில் நூற்பா யாத்துள்ளார். இவ்வாறே தொகை மரபிலும், பொருள் மாறுபடாத எழுத்து வேறுபாட்டைப் பொருந்தக் கூறியுள்ளார் என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது.

[28]"னனவென் புள்ளிமுன் யாவும் ஞாவும்
வினையோ ரனைய என்மனார் புலவர்"

என்றார்.

[மண்யாத்த <மண்ஞாத்த; பொன்யாத்த <பொன்ஞாத்த.]

கவ், வவ் என்பன, கௌ, வௌ என்று வரினும் பொருள் மாறுபடுவதில்லை என்பதைக் கூர்ந்து நோக்கின் புலப்படும்.

---

* அகநானூறு 212.
25, 26. முறையே தொல். எழு. நச். நூ : 69, 70.
27. தொல். சொல். நச். நூ : 78.
28. எழு ,, ,, : 146.

## 'கவ்'

[29]"நிறம் கரியள், கவ்வுக் கடியள் எனப் பண்புந் தொழிலும் நின்று உயர்திணை கொண்டன." என்றவிடத்து, நச்சினார்க்கினியர்; 'கவ்' என்பதைத் தொழிற் பெயராகக் கூறியுள்ளார்.

[30]"கைவிரல் கவ்வும் கல்லாக் காட்சி..."

என்று இறங்குகுடிக் குன்ற நாடனாரும்;

[31]"கவ்வை நல்லணங்கு உற்ற இவ்வூர்..."

என்று உலோச்சனாரும் அகநானூற்றுப் பாடல்களுள் ஆண்டுள்ளனர்.

[32]"கவ்வையாற் கவ்விது காமம் அதுவின்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து."

இக் குறட்பாவில் கவ், தவ் என்னும் இருசொற்களும் ஆளப்பட்டுள்ளன,

[33]"அவ்வியம் இல்லார் அறத்தாறு உரைக்குங்கால்
செவ்வியம் அல்லார் செவிகொடுத்தும் கேட்கலார்
கவ்வித்தோல் தின்னும் குணங்கர்நாய் பாற்சோற்றின்
செவ்விகொளல் தேற்றா தாங்கு"

என்றார் நாலடியார்.

*"வன்பறம் வாயிற் கவ்வி வல்லியம் இரிந்த மாதோ!"

என்றார் கம்பர்.

[34]"கான்றுண்டு வெம்முதலை கவ்வியுண்ட பிள்ளைதனை
மூன்றுண்டு சென்றழைத்த மூதூரும்"

என்றும்,

---

29. தொல். சொல். நச். நூ : 62. உரை.

30, 31. முறையே அகநானூறு : 215, 20.

32. திருக்குறள் : 1144.

33. நாலடியார் : 322.

* கம்பராமாயணம். க-தா-படலம் : பாடல் : 6. அடி : 4. (வை - மு. கோபாலகிருட்டிணமாச்சாரி உரை. 1970.)

34. 'தமிழ் விடுதூது' கண்ணி : 167. விளக்கவுரை. மேற்கோள் பாடல். (கழகப் பதிப்பு : 1975)

[35]"கவ்வைபெறக் கண்களையும் கட்டி மறைத்தம்மா..."

என்றும்,

[36]"மூட்டும் விறகினையச் சோதி கவ்வுங்கால்—அவை
முன்னுப சாரவகை மொழிந்திடுமோ!"

என்றும்,

[37]"கவ்வியதை விடேல்!"

என்றும் சான்றோர் பலர் ஆண்டுள்ளனர். உலக வழக்கிலும், 'பூனை எலியைக் கவ்வியது' 'நாய் கவ்வியது' என்றெல்லாம் வழங்குகிறோம்.

'கவ்'வின் ஒப்பாகக் 'கௌ' என்பதும் சான்றோர் செய்யுள்களுள் ஆளப்பட்டுள்ளமைக்குச் சான்று, பின் வருமாறு:

[38]"சேரியம் பெண்டிர் கௌவையும் மொழிக..."

[39]"கௌவை போகிய கருங்காய் பிடியேழ்..."

[40]"ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்"

[41]"கௌவை எடுக்குமிவ் வூர்"

[42]"கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம்வாயால்
பேர்த்துநாய் கௌவினார் ஈங்கில்லை..."

என்று ஆன்றோர் ஆண்டுள்ளனர்.

[43]"கவ்விய கௌவையும் கவலையும் விடுதலால்"

என்று சுந்தரம்பிள்ளை இரு வரி வடிவையும் ஆண்டுள்ளார்.

## 'வவ்'

நன்னூலார், தெரிநிலை வினைப்பகுதிக்குச் சிறப்புவிதி கூறுமிடத்து,

---

35. வள்ளலார் திருவருட்பா.
36. பாரதியார். 'கண்ணம்மா என் காதலி'
37. புதிய ஆத்திசூடி. பாரதி.
38. அகம் : 65.
39. மலைபடு கடாஅம் : 105.
40, 41. முறையே குறள் : 1147, 1150.
42. நாலடியார் : 70.
43. மனோன்மணீயம், அங்கம் : 5. களம் : 3. அடி : 142.

[44]"நடவா மடிசீ விடுகூ வேவை
நோ(ப்)போ வெள உரிஞ் உண் பொரும் திரும் தின்
தேய்பார் செல்வவ் வாழ்கேள் அஃகு என்று
எய்திய இருபான் மூன்றும் ஈற்றவும்
செய்யிய னேவல் வினைப்பகாப் பதமே"

என்று வினைப்பகுதிகளைத் தொகுத்துக் கூறியவற்றுள் 'வெள, வவ்' என்னும் இரண்டனையும் கூறியுள்ளார்.

'வெள' பெரும்பான்மையாக வழங்கிய காரணத்தால் முற்படக் கூறினர் எனலாம்.

மேலும், மெய்யீற்றுப் புணரியலுள், தொழிற்பெயர்ப்புணர்ச்சி விதிக்கு உரையாசிரியர், [45]"வவ்வு நீண்டது, வவ்வு நீட்சி, வவ்வு நாகா" என்று எடுத்துக்காட்டியுள்ளதாலும் நன்கு தெளிவு பெற முடிகிறது. †"ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்" என்கிறது அகம். ‡"வரையர மங்கையர் வவ்வுதல் அஞ்சுதும்" என்பது பழம் பாடல்.

§"வள்ளற் கடலைக் கெடநீக்கி மருந்து 'வவ்'வி"

என்றும்,

$"வன்று ஏலம்பமுடி வான்முகடு 'வவ்'வி"

என்றும் வழங்கியுள்ளதோடு 'கவ், வவ்' இரண்டனையும் ஒரே பாடலில் ஆண்டுள்ளமையும் நோக்கத்தக்கது.

¶"கவ்வு திக்கனை மேருவைக் கால்வளைத்து
எவ்வி னுன் மலை யேந்திய வேந்துதோள்
வவ்வு சாந்துதம் மாமுலை வெளவிய
செவ்வி கண்டு குலாவுகின் றூர்சிலர்."

---

44. நன்னூல். (காண்டிகையுரை) நூற்பா : 137.

45. ,, ,, ,, : 207. எடுத்துக்காட்டு.

† அகம் : 136. (தொல்-பொ-கற்-நூ : 4. எ. க. நச்சர்.)

‡ யாப்-காரிகை. 76. மேற்கோள் பாடல். (தொல்-பொ-களவு-கழகப்பதிப்பு. பக் : 120. அடிக்குறிப்பு)

§ கம்பராமா. சுந். காண். கடறுவு 12-பா : 42. அடி : 3.

$ ,, ,, ,, ,, ,, : 78. ,, 2.

¶ ,, ,, ,, ,, ,, 177.

(திரு. வை. மு. கோபால கிருட்டிணமாச்சாரியார் பதிப்பு-1970)

[46]''வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்கசிறப்பின் அரசர் செறின் வவ்வார்''

என்கிறது நாலடியார்.

[47] 'வவ்வுதிருக் காதின்மணி குழைச் சங்கு...''

என்றும்,

[48]''வவ்வியமெய் யுணர்வின்கண் வருமானந்தக் கூத்தை...''

என்றும் பெரியபுராணம் பேசுகிறது.

''அடைக்கலம் வவ்வுதல் இன்னு''

என்கிறது சதகப் பாடல். இனி, 'வவ்' என்பது 'வெள' என்று வழங்கியமைக்குச் சான்று:

[49]''வண்டற் பாவை வெளவலின்...''

என்றும்,

[50]''தெண்டிரை பாவை வெளவ...''

என்றும், ஐங்குறுநூறு கூறுகிறது.

[51]''பெண்டிர் நலம் வெளவித் தண்சாரல்...''

என்றும்,

[52]''தன்மண் கடல் வெளவலின்...''

என்றும் கலித்தொகை காட்டுகிறது.

தவ், கவ், வவ் என்னும் மூன்றும் வினைச்சொற்களே (தெவ் என்பதும் வினையடியாகப் பிறந்த உரிச் சொல்லாம்) என்பதைத் தொல்காப்பியர் ''ஏனை வகரம் தொழிற்பெயரியற்றே'' என்பதால் உறுதிப்படுத்துகிருர்.

இனி, அவ் வவ்விறு மொழிகளுக்கு எழுத்ததிகாரத்துள் ஈரிடங்களில் கூறிய விதிகளைப் பொருத்திப் பார்ப்பதும் பொருத்தமாகும்.

1. [53]''ஏனைவகரம் இன்னெடு சிவணும்''

தெவ் + இன் + ஐ = தெவ்வினை, தெவ்வினெடு,

(உரையாசிரியர். எ-கா)

தவ் + இன் + ஐ = தவ்வினை, தவ்வினெடு.

---

46. நாலடியார் : 134.
47. சிறுத்தொண்ட நாய. புரா. பாடல் : 29.
48. திருமூல நாய. புரா. பாடல் : 7.
49, 50. கிழவோற்குரைத்த பத்து : 45, 46.
51, 52. கலித்தொகை (முறையே) பாடல் : 40, 104.
53. தொல். எழு. நச். நூ : 184.

கவ் + இன் + ஐ = கவ்வினை, கவ்விஞெடு.
வவ் + இன் + ஐ = வவ்வினை, வவ்விஞெடு.

2. [55]"ஏனைவகரம் தொழிற்பெய ரியற்றே"
தெவ்வுக்கடிது, தெவ்வுச்சிறிது, தெவ்வுப்பெரிது.
(உரையாசிரியர். எ-கா)

தவ்வுக்கடிது, தவ்வுச்சிறிது, தவ்வுப்பெரிது.
கவ்வுக்கடிது, கவ்வுச்சிறிது, கவ்வுப்பெரிது.
வவ்வுக்கடிது, வவ்வுச்சிறிது, வவ்வுப்பெரிது.

இவ்வாறே ஞாற்சி, மாட்சி, நீட்சி, வன்மை என்பவற்ருேடும் ஒட்டுக.

இனி, "வகரக் கிளவி நான்மொழி ஈற்றது" என்னும் நூற்பாவுக்கு உரையாசிரியர்கள் காட்டிய 'தெவ்'வுடன் 'தவ், கவ், வவ்' என்பவைகளே ஏற்ற எடுத்துக்காட்டுகள் எனக் கொள்ளத் தகும். அவ், இவ், உவ் இம்மூன்றும் 'சுட்டுமுதல் வகரம்' அல்லது 'வவ்விறு சுட்டு' என்று தள்ளத்தகும்.

உரையாசிரியர்கள் காட்டிய, 'அவ், இவ், உவ்' என்பவைகளை, இக்காலப் பேராசிரியர் சிலர் சொல்லாகக் கொண்டு "அவ் ஆய்வு, அவ் எழுத்து, இவ் இயல், இவ் உரை" என்றெல்லாம் எழுதுகின்றனர். 'மொழி நூலறிஞர்' கூற்றுப்படியும், அவ்வாறு விட்டொலித்தல் அல்லது விட்டிசைத்தல் ஏற்கப்படவில்லை என்பதும், ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

"மடம் என்பதற்கும் பேதைமை என்பதற்கும் வேறுபாடு என்னையெனின், மடம் என்பது பொருண்மை அறியாது திரியக் கோடல். பேதைமை என்பது உய்த்து உணராது மெய்யாகக் கோடல்," என்று, இளம்பூரணர் கூறியிருப்பதும் ஈண்டு நினைக்கத்தக்கது.

[55]"வழூங்கியல் மருங்கி னுணர்ந்தனர் ஒழுக்கல்
நன்மதி நாட்டத்த என்னோர் புலவர்"

என்று தொல்காப்பியர் கூறியதற்கேற்பவும்,

[56]"கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொற்றெரிதல் வல்லார் அகத்து"

என்ற வள்ளுவர் வாய்மொழிக்கேற்பவும், "தக்க இன்ன தகாதன இன்ன" என ஓர்ந்து உணர்தல் தமிழறிஞர் கடனும்.

———

54. தொல். எழு. நச். நூ : 382.
55. ,, ,, ,, ,, : 483.
56. திருக்குறள் : 717.

# ஆரியர்கள்

[க. சி. கமலையா]

(பரல்-ஏ, கசூஆம் பக்கத் தொடர்ச்சி)

ரிக்வேதத்தில் விஷ்ணுவுக்கு நான்காவது இடம். பிற்காலத் திரிமூர்த்திகளில் விஷ்ணுவின் பெயர்தான் வேதங்களில் வருகிறது. மூவுலகங்களையும் வெகு விரைவில் சுற்றிவரும் சூரியனே விஷ்ணு.

உஷை விடியற்காலைத் தெய்வமாவாள். வேதங்களில் அடிக்கடி வரும் பெண் தெய்வம். உஷை வானத்தின் மகள். ஆதித்தியர்களின் உடன்பிறந்தாள்; இரவின் அக்காள்; சூரியனால் விரும்பப்படுகிறவள். தொடக்கத்தில் ஆரியர்கள் வெகுவாக உஷையை வணங்கினார்கள். சோமபானத்தில் அவளுக்குப் பங்கு கிடையாது. இந்திரன் அவளுடைய தேரை வஜ்ராயுதத்தால் நொறுக்கிவிட்டான்.

வாயுவுக்குச் சிறப்பான இடம் இல்லை. இந்திரனும் வாயுவும் ஒரே தேரில் அமர்ந்து செல்கிறார்கள். வாயுவுக்கு இந்திரனைப் போலச் சோமபானம் அருந்த முதல் இடம் உண்டு. மழைத் துளிகள் 'இந்து' என்று சொல்லப்பட்டதால் மழையை அனுப்பும் தெய்வம் இந்திரன் எனப்பட்டான் என்பது மாக்ஸ்முல்லர் வாதம். இந்தியாவுக்கு வருமுன்னர் ஆரியர்கள் இந்திரனை வழிபட்டதாகத் தெரியவில்லை. இந்திரன் இடிகளுக்குத் தெய்வம். வேதகாலத்து ஆரியர்களின் தலையாய தெய்வம். ஒரு வேதப்பாடலில் 'ஏகாஷ்டகா' இந்திரனுடைய தாய் என்று சொல்லப்படுகிறாள். ரிக்வேதத்தில் நான்கில் ஒரு பகுதி இந்திரன் புகழ் பாடுகிறது. இந்திரன் சுறுசுறுப்பானவன்; உரமுள்ளவன்; தோள் வலியன்; அழகிய முகமுடையவன்; மஞ்சள் தாடியுடையவன்; நீண்ட கைகளையுடையவன்; இரண்டு குதிரைகள் பூட்டிய தேரில் செல்பவன்; வஜ்ரத்தை (இடியை)ப் படையாகக் கொண்டவன். அது தங்கத்தாலாக்கப்பட்டது. ஆயிரம் முனைகளுள்ளது. இந்திரன் வில்லும் அம்புகளுமுடையவன். வலைவீசி எதிரிகளைப் பிடிப்பவன். அவன் பிறந்தநாளிலிருந்து சோமபானத்தைப் பருகுகிறான். அவனுடைய இடியினால் வானமும் நிலமும் நடுங்குகின்றன. இந்திராணி அவனுடைய மனைவி. பல மனைவியர்களிருந்தாலும் இந்திராணி எல்லாரிலும் மேலானவள். இந்திரனை ஒரு பாடல் புகழ்கிறது:

உன்னால் வெற்றிகொள்ளப்படாதது எதுவுமில்லை. தெய்வங்களில் உனக்கு ஒப்பானவர் யாருமில்லை. இதுவரை பிறந்தவர்களிலும் இனிப் பிறக்கப்போகிறவர்களிலும் எவரும் உன்னை எதிர்க்கமுடியாது. பெருந்தெய்வமே! நீ விரும்பியதைச் செய்வாயாக. (ரிக்வேதம் 165.9.)

இந்திரன் ஆரியர்கள் தலைமேல் வைத்துப் போற்றிய முதல் தெய்வம். வேதங்கள் உரக்கப் பாடிய தெய்வம். பிற்காலத்தில் புகழ் மங்கி வேதங்கள் அறியாத் தெய்வங்கள் முன்பு கைகட்டித் திரியும் நிலைக்கு வந்துவிட்டான் என்பதைப் பின்னெழுந்த இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

**ருத்ரன்** என்றால் 'அழுபவன்' என்று பொருள். ரிக்வேதத்தில் மூன்று பாடல்களில் குறிப்பிடப்படுகிறான். காட்டுமிருகம்போல் கொடுமையானவன் என்று சொல்லப்படுகிறான். சிவ என்ற அடைமொழியால் குறிக்கப்படுகிறான். சிவ என்பது மங்களமான என்று பொருள்படும். சிவன் என்ற பெயரைக் கொண்டவனல்ல என்பதை மனத்தில் கொள்ளவேண்டும். பிற்காலத்தில் சிவன் அடைந்த உயர்நிலை மற்றத் தெய்வங்களுக்கு இல்லை. பிற்காலச் சிவனுடன் இணைந்த ருத்ரன் ஆரியர்கள் கீழே இறங்கிவந்து திராவிடக் கடவுளர்களைத் தங்கள் கூட்டத்தில் சேர்த்துக்கொண்டதற்கு முன்னோடியாகும். 'அழல்போல் செய்யன்' என்று மாணிக்க வாசகரும் (திருவாசகம் 7, 11), 'செம்மேனி தனக்கேயுடைய பெம்மான்' என்று திருநாவுக்கரசரும் சிவந்தமேனியன் சிவன் என்ற பொருளில் பாடினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

மழையைப் பொழிபவன் **பர்ஜன்யன்.** ரிக்வேதத்தில் மூன்று பாடல்களில் ஏத்தப்படுகிறான். முப்பது இடங்களில் ரிக்வேதத்தில் அவனைப்பற்றிய குறிப்புகள் வருகின்றன.

**அக்கினி** நெருப்புத் தெய்வம். இந்திரனுக்கு அடுத்தபடியாக ரிக்வேதம் 200 பாடல்களில் அவனைப் புகழ்கிறது. ரிக்வேதத்தின் முதற்பாடல் அக்கினியை விளித்துப் பாடுகிறது. இரண்டு பகுதிகளைத் தவிர ரிக்வேதத்தில் எல்லாப் பகுதிகளின் முதற்பாடல்களும் அவனைப் புகழ்கின்றன. அக்கினி ஆரியர்களின் யாகத் தீ ஆவான். ஆரியர்களின் யாகச் சடங்குகள் அக்கினியை மையமாகக் கொண்டது.

வேதகாலத்து ஆரியர்கள் புலாலுண்டார்கள். மாட்டிறைச்சியைத் தின்றார்கள். போதையைக் கொடுக்கும் சோம என்ற செடியிலிருந்து உண்டாக்கப்பட்ட மதுவை விரும்பி அருந்

தினர்கள். ரிக்வேதத்தின் 114 பாடல்கள் கொண்ட பகுதி முழுவதும் 'சோம' என்ற செடியின் புகழ் பாடுகிறது. சோம என்ற செடியையே தெய்வமென வழிபட்டார்கள்.

யமனும் யமியும் விவஸ்வத் என்ற சூரியனுடையவும் சரண்யூ என்ற புலர் பொழுதினுடையவும் ஆண் பெண் இரட்டைக் குழந்தையாவர். அவர்களே ஆதிமனிதர்கள். ரிக்வேதத்தின் பத்தாவது பகுதியின் பத்தாவது பாட்டில் யமன் யமியைத் தன்னுடைய மனைவியாக ஏற்றுக்கொள்ள மறுக்கிறான் என்று சொல்லப்படுகிறது. அதர்வ வேதத்தில் சாவுக்குள்ளான முதல் மனிதன் யமன் என்று காணப்படுகிறது.

கட்டப்படாதது — விடுதலையுடையது என்பது அதிதி என்பதன் பொருளாகும். அதிதி சுதந்திர தேவதையாகும். அதிதி ஆதித்தர்களின் தாயாவாள். ரிக்வேதத்தில் அதிதியின் ஆறு பிள்ளைகள் சொல்லப்படுகிறார்கள். மித்ர, ஆர்யமான், பாகா, வருணன், தட்சன், அம்சன் என்பவர்களே அவ்வறுவர். பிற்காலத்தில் சூரியனைக் குறிக்கும் பன்னிரண்டு மாதங்களின் பெயர்களாக ஆதித்தியர் பன்னிருவர் ஆனார்.

'சொல்' என்று பொருள்படும் வாச் பிரஜாபதியால் படைக்கப்பட்டாள். பிற்காலக் கதைப்படி அவனுடைய மனைவியானாள். அவள் வேதங்களின் தாய்; இந்திரனுடைய மனைவி. பிற்கால இலக்கியத்தில் சரஸ்வதியுடன் இணைக்கப்பட்டு, பிரம்மாவின் மனைவியானாள். கலைமகள் என்ற உயர்வு பெற்றுக் கல்விக்கும் ஞானத்துக்கும் தலைவியானாள்.

பிருகஸ்பதி என்றாலும் பிரம்மணஸ்பதி என்றாலும் ஒன்றே; வழிபாட்டை ஏற்றுக்கொள்ளும் கடவுளைக் குறிக்கும்.

காமன் என்பது பிற்காலத்தில் பாலுணர்ச்சியை உண்டாக்கும் தெய்வத்தைக் குறித்து வழங்கப்பட்டு வருகிறது. அதர்வ வேதத்தில் நல்லனவற்றை விரும்பும் ஆசையைத் தருபவன் காமன் என்று சொல்லப்படுகிறது. ரிக் வேதம் காமம் அல்லது ஆசை மனிதனுள் எழுந்த முதல் முளைப்பு என்று சொல்கிறது.

'பிரஜாபதி' என்றால் பிராணிகளின் தலைவன் என்று பொருள். "எந்தத் தெய்வத்தை யாகம் செய்து வணங்குவோம்?" என்ற கேள்விக்கு, "உன்னைத் தவிர வேறு யாருக்கும் படைக்கப்பட்டவர்களைப்பற்றித் தெரியாதே, நாங்கள் உன்னை வணங்கும்போது விரும்புவதை அளிப்பாயாக, ஏராளமான செல்வங்களை உடைய

வர்கள் ஆவோமாக!'' என்று ரிக்வேதப் பாடல் ஒன்று விடை கொடுக்கிறது.

இந்தியாவுக்கு வந்த ஆரியர்களும் ஈரான் ஆரியர்களும் கி. மு. 2500 ஆண்டுகளையொட்டிப் பிரிந்திருக்கலாம். ஆப்கனிஸ்தான் வழியாக ஹிந்துகுஷ் மலைகளைக் கடந்து கி. மு. 2000—1500 இவற்றிற்கிடையுள்ள காலத்தில் இந்தியாவுக்குள் நுழைந்து சிந்துப் பள்ளத்தாக்கின் மேற்பகுதியில் குடியேறிப் பின்னர்க் கங்கையின் மேற்பகுதியில் பரவி அதன் பிறகு நர்மதை நதியடைந்து கடலோரப் பகுதிகளை ஆரியர்கள் சேர்ந்திருக்கலாம். தெற்குப் பீடபூமியை ஊடுருவி இந்தியாவின் தென் பகுதிகளில் மிகச் சிறு தொகையினரான ஆரியர்கள் சென்றடைந்தார்கள். இந்தியக் கலையும் பண்பாடும் ஆரிய - திராவிடக் கலவை என்று ஆனந்தக் குமாரசாமி கருதுகிறார்.

பயன்பட்ட நூல்கள்

Ananda K. Coomaraswamy:—History of Indian and Indonesian Art, New york.

A. C. Clayton: The Rig-Veda and Vedic Religion, London and Madras. 1913.

Sukumari Bhattacharyya: The Indian Theogory. Cambridge. 1970.

———

## டாக்டர் சி. பாலசுப்பிரமணியம் அவர்கட்குச் "சங்க இலக்கியச் செல்வர்'' பட்டம்

*தருமையாதீனத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் ஆவணி மூலத் திருநாளின்போது, அறிஞர் ஒருவருக்குச் சிறப்புப் பட்டம் அளிக்கப்படுவது வழக்கம். அவ் வழக்கத்திற்கிணங்க இவ்வாண்டு ஆவணி மூலத் திருநாளாகிய 8—9—81 அன்று தருமையாதீனத் தவத்திரு குருமகா சந்நிதானம் அவர்கள், சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியம் அவர்கட்குச் "சங்க இலக்கியச் செல்வர்'' என்னும் பட்டத்தினை வழங்கிப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தனர்.*

# திருக்கோளக்குடி குடைவரைக் கோயில்

[தி. இராசமாணிக்கம், பி ஏ., பி. காம்., விசாரத்,

கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர்,
26, இராமகிருஷ்ண சாலை, சேலம்-7]

இராமநாதபுரம் மாவட்டம் திருப்புத்தூரினின்றும் சுண்டக் காடு வேலங்குடிவழி பொன்னமராபதி செல்லும் வழியில் 19 கிலோ மீட்டர் தொலைவில் பிரியும் வழியினின்றும் 2 கி. மீ. தொலைவில் திருக்கோளக்குடி என்னும் சிற்றூர் உள்ளது. இங்குள்ள சிவன் கோயில், பாதாளம், மத்யமம், சுவர்க்கம் என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பாதாளத்தில் சத்யவாகீசுவரரும், மரகதவல்லியும், மத்யமத்தில் சிவ தர்ம புரீசுவரரும் சிவகாமி அம்மையும், சுவர்க்கத்தில் காகோள கிரீசுவரர் என்ற திருக்கோளநாதரும் ஆத்ம நாயகி அம்மையும் கோயில் கொண்டுள்ளனர்.

மலைக்குச் செல்லும் வழியில் வலம்புரி விநாயகர் நான்கு கைகளுடன் யோக நிலையில் பாறையிலேயே உருவாக்கப்பட்டுள்ளார். ஒரு கையில் மோதகம் இருக்கத், தலையில் கரந்த மகுடமும், மார்பில் முப்புரிநூலும், வயிற்றில் உதரபந்தம் (வயிற்றுக் கட்டும்) அணிந்துள்ளார். இவருக்கு முன்னால் பாறையிலேயே பலாப் பழம் உருவாக்கப்பட்டுள்ளது. இந்தக் கோயிலில் பலாமரம்தான் கோயில் மரமாகத் திகழ்கிறது.

மேலே மலைச்சரிவில் கிழக்கு நோக்கிக் குடைவரை அமைக்கப் பட்டுள்ளது. குடைவரையின் முகப்பில் இரண்டு தூண்களும், இரண்டு அரைத் தூண்களும், காணப்படுகின்றன. அவை மேலும் கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப்பட்டை கொண்டன வாகவும் உள்ளன. போதிகை கோணத்தின் வடிவில் உள்ளது. மேலும் தரங்க அமைப்பும் நடுவில் பட்டையும் கொண்டுள்ளது. தூண்களில் தாமரை இதழ்கள் செதுக்கப்பட்டுள்ளன.

முகப்பினை அடுத்து அர்த்த மண்டபம் உள்ளது. அர்த்த மண்டபத்திற்கும் கருவறைக்கும் இடையே இரண்டாவது வரிசைத் தூண்களும், அரைத்தூண்களும் காணப்படுகின்றன. அவையும் முதல் வரிசையில் உள்ளவற்றைப்போன்றே மேலும்

கீழும் சதுரமாகவும், நடுவில் எட்டுப்பட்டை கொண்டனவாகவும் பகுக்கப்பட்டுள்ளன. போதிகை கோணத்தின் வடிவில் உள்ளது. தரங்க அமைப்போ நடுவில் பட்டையோ இல்லை. தூண்களில் தாமரை இதழ்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

ஏனைய பாண்டியர்களின் கோயில்களில் உள்ளது போன்று இங்குள்ள இலிங்கத்திருவுரு குடைவரையின் ஒரு பகுதியாகச் செதுக்கப்பட்டுள்ளது. இறைவனின் ஊர்தியாம் நந்தியும் குடைவரையின் ஒருபகுதியே.

அர்த்த மண்டபத்தில் தென்புறமும் வடபுறமும் முனிபுங்கவர்கள் புதைசிற்பமாகக் காணப்படுகின்றனர். தென்புறம் உள்ளவர் அகத்தியர் என்றும், வடபுறம் உள்ளவர் அவருடைய சீடர் புலத்தியர் என்றும் கூறப்படுகிறார். இருவரும் இரு கைகளுடன் உருவாக்கப்பட்டுள்ளனர். இடக் கைகளில் பூக்கள் உள்ளன. புலத்தியரின் வலக்கை வழிபடுதற் கடையாளமாகத் தூக்கிய நிலையில் வடிக்கப்பட்டுள்ளது. இருவரின் ஆடையின் மடிப்பு விசிறி போன்று எழிலுடன் கண்ணைக்கவரும் வண்ணம் அமைந்திருப்பது காணவேண்டிய ஒன்று.

கருவறைக்கு வடக்கே மேலும் ஓர் இலிங்கம் பாறையிலேயே அமைக்கப்பட்டுள்ளது. அதனை அடுத்து மகேசுவரி, நாராயணி, வராகி, பிரம்மி, கௌமாரி, இந்திராணி மற்றும் சாமுண்டி ஆகிய சப்தமாதர்கள் (ஏழு பெண்கள்) காணப்படுகின்றனர். பொதுவாக, சப்தமாதர்களுடன் விநாயகரையும் வீரபத்திரரையும் அமைப்பதுதான் வழக்கம். ஆனால், இங்கு சப்த மாதர்களுடன் சிவன் உருவாக்கப்பட்டுள்ளான். சிவ பெருமான் அந்தகாசூரனைக் கொல்லச், சிவன், திருமால், பிரமா, முருகன், இந்திரன், வராகம் மற்றும் யமன் ஆகியோரின் சக்திகள் உதவியாக இருந்தன என்று புராணங்கள் கூறுகின்றன. இதனைக் கருத்திற்கொண்டே சப்த மாதர்களுடன் சிவனை இங்கே அமைத்தார்கள் போலும். சிவன் தன் ஊர்தியாம் காளையுடன் காணப்படுவதால், ரிடபவாகனரூடர் எனப் படுகிறார். காளையுடன் சிவன் உருவாக்கப்பட்டிருந்தாலும், அவனது தலையில் உள்ள சடைமுடி ஆலமர் செல்வனுக்கு உள்ளது போன்று சடாமண்டலமாக அமைந்துள்ளமையால், அவனை ஆலமர் செல்வனுகக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது.

ஏனைய சிவன் கோயில்களில் உள்ளது போன்று இந்தக் கோயிலில் நவகோள்கள் திருமுன் இல்லை. இங்கு 3 சிவன்,

3 சக்தி, 3 விநாயகர் மற்றும் 3 முருகன் திருமுன்கள் உண்மை யால் நவகோள்களுக்கென்று தனியாகத் திருமுன் அமைக்கப்பட வில்லை என்று கூறப்படுகிறது. மலைமேலுள்ள அம்மன் திரு முன்னுக்கெதிரே அழகார்ந்த ஆதிசேடனின் வடிவம் கைகூப்பிய நிலையில் (அஞ்சலி அஸ்தம்) உள்ளது. இவர் திருமெய்யத்தில் கோயில் கொண்டுள்ள சத்யமூர்த்தியை வணங்கும் நிலையில் உள்ளதாகச் சொல்லப்படுகிறது.

இங்குள்ள குடைவரைக் கோயிலின் அமைப்பு பல்லவப் பேரரசன் மகேந்திரவர்மன் பாணியில் உள்ளது. இருப்பினும் அவன் வழித்தோன்றலான இராசசிம்மன் பாணியில் உள்ளது போன்றே இங்கும் புதைசிற்பங்களுக்கு முதன்மை அளிக்கப் பட்டுள்ளது. எனவே, இதன் காலத்தை எட்டாம் நூற்றுண்டைச் சார்ந்ததாகக் கருதலாம்.

———

## பாரதியார் நினைவுநாள் விழா

*எட்டயபுர மணிமண்டப அரங்கில் 27—9—1981 அன்று பாரதியார் நினைவுநாள் விழா நடைபெற்றது விழா நாயன நல்லிசை யுடன் தொடங்கியது. பாரதியார் நூற்றுண்டு விழாவின் சிறப்பு அலுவலர் திரு. சி. என். கிருஷ்ணபாரதி வரவேற்புரை யாற்றினுர். திருநெல்வேலி மாவட்ட வருவாய் அலுவலர் திரு வி. இராமதாஸ் விழாவைத் துவக்கிவைத்தார்.*

*அன்று நடைபெற்ற கவியரங்கத்திற்குப் புலவர் கிரகோரி தலைமை தாங்கினுர். ஏழு கவிஞர்கள் கலந்துகொண்டு கவியுரை செய்தனர். பின்னர்ச் சிறப்புக் கூட்டத்திற்கு டாக்டர் எஸ் பாலச்சந்தர் தலைமை தாங்கினுர். திருவாளர்கள் டாக்டர் ந. சஞ்சீவி, ஔவை நடராசன், மா. சு. சம்பந்தன், கே பி. கண்ணன், எம். அப்பாத்துரை எம்.எல்.ஏ., ந. சோமயாஜுலு, வே. நாராயணன் ஆகியோர் சிறப்புரையாற்றினர்.*

*திருநெல்வேலி மாவட்ட ஆட்சித்தலைவர் திரு. என். எஸ். ஹிரா அவர்கள் பரிசுகள் வழங்கி வாழ்த்தினுர்.*

*எட்டயபுர மணிமண்டபத்தை, இதுவரை மேற்பார்த்துவந்த குழுவினர், இன்று தமிழக அரசுப் பொறுப்பில் அளிப்பதற்கு உரிய ஆவணத்தைப் படித்துக் கொடுத்தனர். திரு. கிருஷ்ணபாரதி அதனைத் தமிழக அரசின் சார்பில் ஏற்றுக்கொண்டார்.*

*திரு. சேதுராசன் குழுவினரால் 'பெரும்புலவர் பாரதியின் வீர வரலாறு' வில்லிசை விருந்து இரவு நடைபெற்று, விழா இனிது முடிந்தது.*

# பாராட்டுக்குரிய துணைவேந்தர்

பொறியியல் துறை, தமிழ்த்துறை ஆகியவற்றில் சிறந்த பயிற்சியும் பட்டறிவும், நுண்மாண் நுழைபுலமுமுடைய டாக்டர் வி. சி. குழந்தைசாமி அவர்கள் அண்மையில் சென்னையில் பேரறிஞர் அண்ணா தொழில் நுட்பப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகப் பதவியேற்ற செய்தியறிந்து மகிழ்ச்சியடைகிறோம்.

டாக்டர் குழந்தைசாமி அவர்கள், திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு வேளாண்மைக் குடும்பத்தில் 1930இல் பிறந்தவர். இவர் ஆந்திரப் பல்கலைக் கழகத்தில் பொறியியல் துறையில் பயின்று பட்டம் பெற்று, கரக்பூர் ஐ. ஐ. டி.யில் (Indian Institute of Technology) பட்ட மேற்படிப்பை முடித்தார். பின்னர் மேற்கு செருமனியில் மேற்பட்டப் படிப்பினைப் பெற்று, அதன்பிறகு அமெரிக்காவில் இல்லினாய்சு பல்கலைக் கழகத்தில் சேர்ந்து 'நீரியல்' துறையில் டாக்டர் பட்டம் பெற்றார்.

பின்னர், கிண்டி பொறியியல் கல்லூரியில் நீரியல் துறைப் பேராசிரியராகவும், அதன் பட்ட மேற்படிப்புத் துறைத் தலைவராகவும் சில காலம் பணியாற்றினார். 1974இல் மாநிலத் தொழில் நுட்பக் கல்வித் துறை இயக்குநராகவும் பணியாற்றினார். அடுத்து 1978இல் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தராகப் பொறுப்பேற்றார். பின்னர் 1979இல் அப்பதவியைத் துறந்து அனைத்து நாடுகளின் கழகத்தில் (யுனெஸ்கோ) நீரியல் துறை கருத்துரைஞராகப் பதவி ஏற்றார்.

இங்ஙனம் பல்லாற்றானும் படிப்பும் பட்டமும் பட்டறிவும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற இவர் தற்போது அண்ணா நுண்கலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக அமர்த்தப்பெற்றுள்ளார். நீரியல் துறையில் இவர் கண்டுபிடித்த ஒரு விதிமுறை இவரது பெயராலேயே வழங்கப்பெற்று வருகிறது. அணைக்கட்டுகளை அமைப்பதில் இவர் ஆற்றிய பணிகளுக்காக நடுவண் அரசின் நீர்ப்பாசனத்துறை இவருக்குத் தங்கப் பதக்கம் வழங்கிச் சிறப்பித்துள்ளது என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

இவரது நீரியல்துறைப் புலமையினை அறிந்து பாராட்டும் வகையில், மேற்கு ஆஸ்திரேலிய பல்கலைக் கழகம், ஆஸ்திரேலிய பல்கலைக் கழகங்களில் ஆய்வுச் சொற்பொழிவு நிகழ்த்துவதற்காக அழைத்து, உதவித்தொகையும் வழங்கி வரவேற்றது.

இவை அனைத்துக்கும் மேலாக, இவர் ஒரு தமிழறிஞர் என்பதும் குறிப்பிடத்தக்க செய்தியாகும். "குலோத்துங்கன் கவிதைகள்" என்னும் பெயரில் இவர் தம்முடைய கவிதைத் தொகுதிகளை வெளியிட்டுள்ளார். தமிழ் எழுத்துச் சீர்திருத்தம் பற்றிய இவரது ஆராய்ச்சி நூலை மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது. இவர் தம் அறிவியற் பணிகளையும், தமிழ்ப் பணியினையும் பாராட்டுமுகத் தான் யாழ்ப்பாணம் பல்கலைக் கழகம் இவருக்கு டாக்டர் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக் கழகம் அமைப்பதுபற்றி ஆராய் வதற்கென நிறுவப்பெற்ற குழு, தமிழ் எழுத்துச் சீர்திருத்தக்குழு, தமிழ் வளர்ச்சிக் குழு ஆகியவற்றில் இவர் உறுப்பினராக இருந்து பணியாற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். இத்தகைய திறமை யாளர் தொழில் நுட்பப் பல்கலைக் கழகத் துணைவேந்தராகப் பதவி ஏற்றிருப்பது சாலப் பொருத்தமுடையதாகும். அன்னாருக்கு நமது பாராட்டுதல்களையும் வாழ்த்துகளையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

---

## சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் சாந்தப்பா

கடந்த செப்டம்பர்த் திங்கள் 3ஆம் நாளுடன் திரு ஜி. ஆர். தாமோ தரன் அவர்களின் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பதவி முடிவடைந்தது. அடுத்து டாக்டர் எம். சாந்தப்பா அவர்கள் துணை வேந்தராக அமர்வு பெற்றுள்ளார்.

1952ஆம் ஆண்டில், சென்னைப் பல்கலைக்கழகத்தில், இயற்பியல் இயைபியல் துறைகளின் தலைவராகப் பணியாற்றத் தொடங்கிய திரு. சாந்தப்பா அவர்கள் பதவி உயர்வு பெற்று மதுரைப் பல்கலைக்கழகத்தில் 1958 முதல் 1962 வரை இயைபியல்துறைப் பேராசிரியரானார். பின்னர்த் தோல் பதனிடும் ஆராய்ச்சித் துறையின் மைய நிலையத்தின் இயக்குநராக 1972 முதல் 1979 முடிய அப் பதவியில் இருந்தார்.

அடுத்து, ஓராண்டு காலம் திருப்பதி வேங்கடவன் பல்கலைக் கழகத் துணைவேந்தராகப் பணியாற்றினார். டாக்டர் சாந்தப்பா அவர்கள் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர். சென்னைப் பல்கலைக் கழகத்தின் 125 ஆண்டுக்கால வரலாற்றில் தாழ்த்தப்பட்ட இனத்தவர் ஒருவர் துணைவேந்தர் ஆவது இதுவே முதல் முறையாகும். அது போலவே ஒரு பல்கலைக்கழகப் பேராசிரியர் துணைவேந்தர் ஆவதும் இதுவே முதல் முறையாகும்.

திரு. சாந்தப்பா அவர்கள் இதுகாறும் 300க்கு மேற்பட்ட அறிவியல் நூல்களை வெளியிட்டுள்ளார் என்பதும் அறிவியல் துறையில் பல விருதுகளைப் பெற்றிருக்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்க செய்தி யாகும். டாக்டர் சாந்தப்பா அவர்களுக்கு நமது வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

# ஆருயிர்களின் அன்பர்
# திரு. டி. எஸ். ஸ்ரீபால் மறைவு

‘ஜீவ பந்து’ எனச் சமணத் தலைவர்களால் சிறப்பாகப் பாராட்டப் பெற்றவரும், தமிழார்வம் மிக்கவரும், தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, கலைஞர் ஆகியோரிடமும், கழகத் தலைவர் தாமரைச் செல்வர் வ. சு. அவர்களிடமும் அன்பும் நட்பும் கொண்டவரும், உயிர்க்கொலை தவிர்க்கப் பல அறப்போர்களில் ஈடுபட்டவருமான சமண அறிஞர் ‘ஜீவ பந்து’ டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள் 11—8—81 அன்று காஞ்சிபுரத்தை அடுத்துள்ள திருப்பறம்பூர் என்னும் சிற்றூரில் தமது 82ஆவது அகவையில் இறையடி யெய்தினார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம்.



திரு. ஸ்ரீபால் அவர்கள் திருப்பறம்பூரில் சந்தணம் நயினார் மரபில் 1900ஆம் ஆண்டில் ஸ்ரீகுணபால நயினாருக்கும், குழந்தை அம்மையாருக்கும் நன்மகனாராகப் பிறந்தார். சென்னைப் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் கல்வி கற்றார். உடல்நலமின்மையால் இவர்தம் பள்ளிப் படிப்பு தொடரமுடியாத நிலை ஏற்பட்டது. ஆனால், தமிழ் அறிஞராக விளங்கிய அகத்தியப்ப நயினார் என்பவரிடம் சூடாமணி நிகண்டு, நாலடியார், திருக்குறள், சீவக சிந்தாமணி ஆகிய நூல்களைப் பாடங் கேட்டுத் தமிழறிஞரானார்.

இவருக்குப் பத்தொன்பதாம் அகவையில் திருமணம் நடைபெற்றது. குடும்ப வாழ்க்கையில் இருந்துகொண்டே சமயப் பணியிலும், பலபொதுநலப் பணிகளிலும் ஈடுபட்டார். 1922இல் காங்கிரஸ் இயக்கத்தில் ஈடுபட்டு நாட்டு விடுதலைக்காக உழைத்தார். இவர் சிறுதெய்வங்கட்கு உயிர்ப்பலியிடுவதைத் தடுக்கப் பல பேரூர்களுக்கும் சிற்றூர்களுக்கும் தம் தொண்டர்களோடு சென்று கொல்லாமையின் சிறப்பை விளக்கி உரையாற்றினார். ஸ்ரீபால் அவர்களின் பலி விலக்குக் கொள்கைக்குத் தந்தை பெரியாரின் மூட நம்பிக்கை ஒழிப்பு இயக்கம் ஓரளவு துணைபுரிந்தது. எனவே, அவர் பெரியாரிடம் பற்றுக் கொண்டார். புராணப் பொய்மைகளை விளக்கிக் ‘குடியரசு’ இதழில் கட்டுரைகள் எழுதினார்.

திருவொற்றியூர் வட்டப்பாறை நாச்சியார் என்னும் காளிக்கு நெடுங்காலமாக எருமைக்கடா பலி கொடுக்கப்பட்டு வந்ததை வன்மையாக எதிர்த்துப் போராடி அதனை விலக்கினார். இதுபோல் பல ஊர்களில் உயிர்ப்பலி எதிர்ப்பில் ஈடுபட்டு அவற்றை அடியோடு விலக்-

கினர். அவ்வகையில் இவர் திருநெல்வேலி பாளையங்கோட்டையில், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக நிறுவனர் உயர்திரு. வ. திருவரங்கனார் அவர்களுடன் இணைந்து பல நிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட்டது குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும். திரு. ஸ்ரீபால் பாளையங்கோட்டையில் தங்கியிருந்தபோது கழக ஆட்சியர் குடும்பத்தினர் இவருக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வந்தனர். இவர் நாடோறும் பலி விலக்குச் சொற்பொழிவுகள் செய்து நாட்டுமக்களுக்கு நல்லறிவூட்டி வந்தார். இவர் சீவக சிந்தாமணிபற்றிச் சொற்பொழிவுகள் செய்து வந்ததோடு திருக்குறள் பற்றிய நூல்களும் எழுதியுள்ளார்.

இத்தகைய பெரியாரின் மறைவு தமிழகத்திற்கும் குறிப்பாகச் சமண சமயத்திற்கும் பேரிழப்பாகும். மறைந்த பெரியார் ஸ்ரீபால் அவர்களின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## சமண அறிஞர் திரு. டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள் கலைஞருக்குச் சூட்டிய புகழ்மாலை

கடந்த ஆகஸ்ட் 26 ஆம் தேதியன்று சென்னை திருவல்லிக்கேணியில் நடைபெற்ற சமணத் துறவி ஜெயாச்சாரியா நூற்றாண்டு விழாவிற்குத் தி. மு. கழகத்தலைவர் கலைஞர் தலைமை ஏற்றுச் சிறப்புரையாற்றினர். தமது உரையில் சமண சமயக் கொள்கைகளைவும், சமணரின் தமிழ்த் தொண்டுகள்பற்றியும் அவர் விரிவாகக் குறிப்பிட்டார். தலைவர் கலைஞரின் உரையைப் படித்து, பெருமகிழ்வும் மனநிறைவும் கொண்ட முதுபெரும் சமண அறிஞர் 'ஜீவ பந்து' டி. எஸ். ஸ்ரீபால், கலைஞருக்கு நன்றியும் பாராட்டும் தெரிவித்து ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அந்தக் கடிதத்தின் விவரம் வருமாறு :

என் அன்பிற்கும், மதிப்பிற்கும், பெருமைக்கும் உரிய பெருந்தகைக் கலைஞரேறே;

வணக்கம் பல. தாங்கள் அணுவிரத சிறப்புக் கூட்டத்தில் பேசிய சொற்பொழிவில், சமண சமயத்தின் சிறப்பையெல்லாம் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளீர்கள். இன்றைய அரசியல்வாதிகளில் சமண சமயத்தின் கொள்கைகளையும், தமிழ்த் தொண்டுகளையும் எடுத்துப் பேசுபவர்கள் தங்களைத் தவிர வேறு எவரும் இலர் என்பதை என்றோ யான் அறிவேன்.

சமண சமய அறவோர்கள் உலக மக்களின் பண்பாட்டிற்கும், அறிவிற்கும் வகுத்தருளிய அறநெறிகளை உலகம் நன்கு அறியும். தாங்கள் ஆற்றிய உரையில் சமண சமய அறவோர்களின் அறிவுரை பளிச்சிடுகின்றது. தங்கள் உரையை 'முரசொலி'யில் சிறப்பாக வெளியிட்டிருப்பதைக் கண்டு அகமிக மகிழ்ந்தேன்.

தாங்கள் அணுவிரத மாநாட்டில் பேசுகின்றீர்கள் என்பதை அறிந்து காஞ்சிபுரம் கழகப் பொறுப்பாளரும், என் அன்பிற்குரிய வருமான திரு. கே. எஸ். அகஸ்தியப்பன் அவர்கள் ஓடோடி வந்து, கேட்டு மகிழ்ந்து என்னிடம் கூறினர். நானும் மகிழ்ச்சியில் ஆழ்ந்தேன். தங்கள் சொற்பொழிவில் என்னையும் மறவாமல்—என் தொண்டுகளைப்

பாராட்டிப் பேசியமைக்கு நன்றியும், வணக்கமும் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நன்றியுரை உலகியல் முறையில் கூறியதே அன்றி, என் உள்ளத்தில் குடிகொண்டுள்ள அன்பையும், பற்றையும், பாசத்தையும் காட்டித் தங்களைப் பாராட்ட வேறு உரை இல்லையே என்று எண்ணி வருந்துகின்றேன். என் மானசிக வழியில் தங்கள் திருவுருவைத் தரிசித்துப் பணிந்து வணங்குகின்றேன். தங்கள் பேருரையைப் படித்த பல ஜெயினப் பெருமக்களும், மற்ற அன்பர்களும் உளமகிழ்ந்து உணர்வு பேலிட்டுத் தங்கள் அறிவாற்றலைப் பாராட்டி மகிழ்ந்தார்கள். தங்களுக்கு மீண்டும் என் நன்றியையும் வணக்கத்தையும் செலுத்துகின்றேன்.

என்றென்றும் தங்களை மறவாத அன்பன்

டி. எஸ். ஸ்ரீபால்

நன்றி : முரசொலி 2—9—1981

---

## வரலாற்றுப் பேரறிஞர் டாக்டர் கே. கே. பிள்ளை மறைவு

தென்னிந்திய வரலாற்று வல்லுநரும் சென்னைப் பல்கலைக் கழக முன்னாள் இந்திய வரலாற்றுத்துறைப் பேராசிரியருமான டாக்டர் கே. கே. பிள்ளை அவர்கள் 26-9-81 இல், தமது 76ஆவது அகவையில் காலமானார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம்.



திரு. பிள்ளையவர்கள் வரலாற்றுத் துறையில் உலகப் புகழ் பெற்றவர். திருவனந்தபுரத்திலும் பின்னர் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்திலும் பயின்று பட்டம் பெற்றார். இவர் சிலகாலம் சென்னை மாநிலக் கல்லூரியில் வரலாற்றுத் துறைப் பேராசிரியராகப் பணியாற்றினர். பின்னர் 1971இல் பல்கலைக் கழகப் பேராசிரியரானார். தமிழகத்தின் உள்ளாட்சித்துறை பற்றிய இவரது ஆராய்ச்சிக்கு ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம் டாக்டர் பட்டம் வழங்கியது. சுசீந்தரம் கோயிலின் பெருமையை உலகிற்கு எடுத்தியம்பியவர் திரு. பிள்ளை அவர்கள். பிள்ளை அவர்களின் ஆராய்ச்சியினைப் பாராட்டிச் சென்னைப் பல்கலைக்கழகம் இவருக்கு டாக்டர் பட்டம் வழங்கியது. 1970 இல் சபல்பூரில் நடைபெற்ற இந்திய வரலாற்று மாநாட்டில் இவர் தலைமை தாங்கினர். இத்தகைய பேராசிரியரின் மறைவு வரலாற்றுத்துறைக்கு ஒரு பேரிழப்பேயாகும். மறைந்த பேராசிரியர் அவர்கள் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

# தமிழ்ப் பல்கலைக்கழகத் துவக்கவிழா நிகழ்ச்சிகள்

பேரறிஞர் அண்ணா அவர்களின் பிறந்த நாளான செப்டம்பர் 15இல் தமிழகத்தில், தஞ்சையில் முதன்முதலாகத் தமிழ்ப் பல்கலைக் கழகம் துவக்கப்பெற்றது.

இத் துவக்கவிழாவினை முன்னிட்டுத் தஞ்சை மாநகரம் விழாக் கோலம் பூண்டிருந்தது. முறையே 15, 16 17ஆம் நாள்கள் தஞ்சை மாவட்டத்திலுள்ள கல்விக் கூடங்கட்கு விடுமுறை அளிக்கப்பட்டது. மற்ற நகரங்களிலிருந்து தஞ்சாவூருக்குக் கூடுதல் பேருந்துகள் விடப் பட்டன. மற்றும் இவ் விழாத் தொடர்பான விளம்பரங்கள் குறைவின்றி அரசின் சார்பில் செய்யப்பட்டிருந்தன.

தமிழ்ப் பல்கலைக்கழகத் துவக்க விழாவினைத் தமிழக ஆளுநர் சாதிக் அலி அவர்கள் துவக்கி வைத்தார்கள். மாண்புமிகு முதல்வர் ம. கோ. இராமச்சந்திரன் விழாவுக்குத் தலைமை தாங்கிப் பல்கலைக் கழகக் கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டினார். பல்கலைக் கழக நூல் நிலையக் கட்டிடத்திற்கு நடுவண் அரசின் வேளாண்மைத் துறைத் துணை அமைச்சர் ஆர். வி. சுவாமிநாதன் அடிக்கல் நாட்டினார்.

16ஆம் நாள் கலைப்பிரிவு, தமிழ் வளர்ச்சிப் பிரிவு, சுவடிப் பிரிவு, மொழிப் பிரிவு, அறிவியல் பிரிவு ஆகியவற்றை முறையே தமிழக அமைச்சர் இராசா முகமது, கர்நாடக அமைச்சர் சங்கர்ராவ், ஆந்திர அமைச்சர் வெங்கட்ராம் ரெட்டி, தமிழக அமைச்சர் குழந்தைவேலு, புதுவை அமைச்சர் ரேணுகா அப்பாதுரை ஆகியோர் துவக்கி வைத்தனர்.

17ஆம் நாள் தமிழகச் சட்டமன்றத் தலைவர் மாண்புமிகு ராசாராம் அவர்கள் தலைமையில் பல்கலைக் கழகத் துவக்கவிழாவின் நிறைவுவிழா நடைபெற்றது. இவ்விழா தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா ஆகியோரின் பிறந்தநாள் விழாவாகவும் தஞ்சை விளையாட்டரங்கில் நடைபெற்றது.

இவ் விழாவினையொட்டிக் கவிஞர் சுரதா அவர்களின் தலைமையில் கவியரங்கமும், மாண்புமிகு ச. இராமச்சந்திரன் அவர்கள் தலைமையில் வழக்காடு மன்றமும் நடைபெற்றன. மாண்புமிகு அமைச்சர் எஸ். டி. சோமசுந்தரம் வரவேற்புரை நிகழ்த்தினார். அடுத்துப் பெரியார் படத் திறப்பினையும், திரு. வி. க. விருது வழங்கலையும் தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் நிகழ்த்தினார். மதுரை பைந்தமிழ்ப் பாவலர் திரு. அ. கி. பரந்தாமனார் அவர்கட்குத் திரு. வி. க. விருதாக 10,000 வெண்பொற் காசுகள் வழங்கப்பெற்றன. மாண்புமிகு அமைச்சர் செ. அரங்கநாயகம் நன்றியுரை வழங்கினார்.

மற்றும், தமிழக அமைச்சர்கள், பல கட்சித் தலைவர்கள் இவ் விழாவில் கலந்துகொண்டு வாழ்த்துரை வழங்கினர். அத்துடன் இன்னிசை, நாடக நாட்டியம் இன்னபிற கேளிக்கைகளும்இவ் விழாவில் இடம் பெற்றன. 'குடவாயில் கோட்டம்' என்னும் நாடகமும் நடைபெற்றது.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## பைந்தமிழ்ப் பாவலர் அ. கி. பரந்தாமனார் அவர்கட்குப் பாராட்டு விழா

புரசை சுந்தரர் தமிழ்க் கல்லூரி இயக்குநர் பைந்தமிழ்ப் பாவலர் அ. கி. பரந்தாமனார் அவர்கள் தமிழ் வளர்ச்சி இயக்கத்தின் திரு. வி. க. விருதாக 15—9—81இல் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் திறப்பு விழாவின்போது பொற்கிழி பெற்றமையினைப் பாராட்டு முகத்தான் 1—10—81 அன்று மாலை ஷெ கல்லூரியில் பாராட்டுவிழா ஒன்று நடைபெற்றது. புலவர், செல்வி மோ. வித்தியா ரத்தினம் அவர்களின் இனிய இறை வணக்கப் பாடலுடன் விழாத் தொடங்கிற்று. புலவர் சாந்தசுந்தரனார் வரவேற்புரை வழங்கினார். மகாவித்துவான் பண்டித வி. நடேசனார், திருமதி சௌந்திரா கைலாசம் அம்மையார், சிலம்பொலி செல்லப்பன், பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். பைந்தமிழ்ப் பாவலர் திரு. அ. கி. ப. அவர்கள் அன்புரை வழங்கியபின் வித்துவான் சச்சிதானந்தம் அவர்கள் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது. பைந்தமிழ்ப் பாவலர்க்கு நமது வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## அரசஞ் சண்முகனார் 113ஆம் பிறந்தநாள் விழாவும் நூல் வெளியீட்டு விழாவும்

பெரும்புலவர் அரசஞ் சண்முகனாரின் 113ஆவது பிறந்தநாள் விழாவும் அவரியற்றிய 'சிதம்பர விநாயகர் மாலை' 'மாலை மாற்று மாலை' ஆகிய நூல்களின் வெளியீட்டு விழாவும் 27—9—81 அன்று சோழ வந்தான் பாலன் திரையரங்கில் நடைபெற்றன. டாக்டர் வ. சுப. மாணிக்கனார் தலைமை தாங்கினார். மாண்புமிகு அமைச்சர் காளிமுத்து நூல்களை வெளியிட்டார். கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் அவர்கள் சிறப்புரை யாற்றினர்.

## வள்ளலார், காந்தியடிகள் விழா

இராமலிங்கர் பணி மன்றத்தின் சார்பில் சென்னை, ஏ. வி. எம். இராசேசுவரி திருமண மண்டபத்தில் 1—10—81 முதல் 8—10—81 முடிய வள்ளலார், காந்தியடிகள் விழா நடைபெற்றது. முதல் நாள் விழா டாக்டர் வி. சி. குழந்தைசாமி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தமிழக ஆளுநர் விழாவினைத் தொடங்கி வைத்தார். தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் அவர்கள் வரவேற்புரை ஆற்றினார். அடுத்து 7 நாட்களும் முறையே டாக்டர் ஒளவை நடராசன், திரு. என். கிருட்டிணசாமி ரெட்டியார், டாக்டர் ம. பொ. சிவஞானம், நா. மகாலிங்கம், ஊரன் அடிகள், டாக்டர் இராசா சர் முத்தையா செட்டியார், செ. து. சுந்தரவடிவேலு, டாக்டர் ப. நடராசன் ஆகியோர் தலைமையில்

நடைபெற்றன. இவ் விழாக்களை யொட்டிக் கருத்தரங்கு, நூல் வெளியீடு, கவி அரங்கம் ஆகியனவும் நடைபெற்றன. 4—10—81 அன்று திரு. நா. மகாலிங்கம் அவர்கள் தலைமையில் தமிழ்நாட்டுத் தமிழர் பேரவையின் நான்காவது மாநில மாநாடு நடைபெற்றது.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-டுசு, சஅ ஆம் பக்கத் தொடர்ச்சி)

உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள்
கழக ஆட்சியாளர் ரூ. 10—00
,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் 5—00
,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை 5—00

———

# மதிப்புரை

## திருஞான சம்பந்தர்—ஓர் ஆய்வு (முதற் பகுதி)

[ஆசிரியர்: டாக்டர் வை. இரத்தினசபாபதி, வித்துவான் பி. ஓ. எல்., எம்.ஏ., பி.எச்.டி., துணைப்பேராசிரியர், டாக்டர் எஸ் இராதா கிருட்டிணன் மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை-5, விலை: ரூ. 16]

பல்கலைக் கழகத்தின் வாயிலாக மெய்யுணர்வு நூல்களை வெளியிடுதல் வேண்டும் என்னும் நோக்கத்துடன் நிறுவப்பட்ட, டாக்டர் எஸ். இராதா கிருட்டிணன் மெய்யுணர்வு நிறுவனத்தின் மேல்நிலைக் கல்வி நிறுவனத்தின் வாயிலாக வெளிவந்திருக்கும் இந்நூல், சைவசமய குரவர் நால்வரின் சமயத் தொண்டு, சமுதாயத் தொண்டு, சைவப்பணி ஆகியவற்றை மக்களுக்கு எடுத்துரைத்து அவர்கள் அவற்றைப் பின்பற்றச் செய்தல் வேண்டும் என்னும் சீரிய நோக்குடன டாக்டர் வை. இரத்தினசபாபதி அவர்களால் எழுதப்பட்டுள்ளது. இவ்வாராய்ச்சியில் சைவ சமய குரவர் நால்வருள் முதல் நின்ற பெருந்தகை ஞானசம்பந்தரைப்பற்றிய ஆய்வின் முதற் பகுதியாக இந் நூலாசிரியர் திருஞான சம்பந்தர் வரலாற்றை யொட்டிய விளக்கங்கள், அருளியல் விளக்கங்கள் ஆகியவற்றை 8 தலைப்புக்களில் மிக விரிவாக தக்க வரலாற்றுச் சான்றுகளுடன் கூறுகின்றார். சீர்காழிக்குரிய பன்னிரண்டு பெயர்கள் பற்றிய விளக்கம், காழியின் வரலாறு ஆகியன நன்கு விளக்கப்பட்டுள்ளன. சுருங்கச் சொல்ல வேண்டுமானால் திருஞான சம்பந்தரின் கொள்கை யாது என்பதை விளக்குமுகத்தான் அதற்கு அடிப்படை கோலுகிறது இவ்வாராய்ச்சிப் பகுதி எனலாம். ஆராய்ச்சி ஆழ்ந்து அகன்று செல்கின்றது. சமயத் துறையில் சம்பந்தரைப்பற்றித் தெளிவாகப் புரிந்துகொள்ள விழைவார்க்கு இந் நூல் பெருந்துணை புரியவல்லது. பதிப்புமுறை போற்றத்தக்க வகையில் அமைந்துள்ளது.

## மாறி வரும் மங்கையர் உலகம்

*[டோக் பெருமாட்டி கல்லூரி முதுகலைத் தமிழ்த்துறை வெளியீடு: மதுரை. விலை: ரூ. 10-00]*

மாறிவரும் உலகியலுக்கேற்பச் சமுதாயமும் மாற்றத்தை வரவேற்க வேண்டும். அங்ஙனம் நம்மனோர் புதுமையை—மாற்றத்தை வரவேற்கும் பக்குவத்தை இன்னமும் பெறவில்லை. பெற வேண்டும். அதிலும் ஆடவரைவிட மகளிர் மாற்றங்களைப் போற்றி வரவேற்க வேண்டும்—இந்த உண்மையைத் தமிழக மாந்தர்க்கு அறிவுறுத்தும் வகையில், மதுரை, டோக் பெருமாட்டி கல்லூரித் தமிழ்த் துறை (முதுகலை) யினர் இந்நூலை வெளியிட்டுள்ளனர்.

தமிழ்த்துறை முதுகலை மாணவியர் அரிதின் முயன்று, பெண்களே தங்கள் நிலையினை எடுத்துரைக்கும் முறையில் எழுதியிருக்கும் ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பே இந் நூல். இதில் பெண்களை இழிவு படுத்தும் நாளேடுகளின் போக்கு பற்றியும், வரதட்சிணைக் கொடுமை பற்றியும், சட்டங்கள் எந்த வகையில் பெண்களுக்குப் பாதுகாப்பளிக்கின்றன, அதில் உள்ள குறைபாடுகள் என்ன? என்றின்ன பிற அரிய செய்திகளைப் புள்ளி விவரங்களோடு வெளியிட்டுள்ளன. சுருங்கச் சொல்ல வேண்டுமானால்,

> "பெண்ணடிமை தீருமட்டும் பேசுந் திருநாட்டு
> மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற் கொம்பே"

என்ற பாவேந்தர் பாரதிதாசனாரின் கூற்றுக்கு இலக்கியமாகத் திகழ்கிறது இவ்வாராய்ச்சி நூல். இஃதொரு புது முயற்சி. ஆடவர், பெண்டிர் இருபாலாரும் இப் புத்தகத்தைப் படித்துத் தெரிந்துகொள்ள வேண்டிய செய்திகள் நிரம்ப உள்ளன.

## தேம்பாவணி துணைக் கதைகள்

*[ஆசிரியர்: துரை சுந்தரமூர்த்தி, தமிழ் இலக்கியக் கழகம், திருச்சிராப்பள்ளி-1 விலை: ரூ 6-00]*

வீரமாமுனிவர் பிறந்த 300 ஆம் ஆண்டு விழாவாக இந்நூல் வெளியிடப்பெற்றுள்ளது. இதில் தேம்பாவணியிலுள்ள துணைக் கதைகள் சிலவற்றை, இனிய தமிழில் எழுதியுள்ளார் இந்நூலாசிரியர். இதன் மூலம் தேம்பாவணியைத் தமிழ்ப்புலமை பெற்றோரேயன்றி ஏனைத் தமிழ்ப் பற்றுளார் அனைவருமே படித்தின்புற நல்வாய்ப்பாய் அமைந்துள்ளது இந்நூல். சுவையும் பயனுமிக்க நல்ல கதைகள்.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

பதிவு எண் 4899.

# கழகம் வெளியிட்டுள்ள ஆங்கில நூல்கள்

## TIRUKKURAL

| | | Rs. | Np. |
|---|---|---|---|
| Tirukkural—Dr. G. U. Pope | | 25 | 00 |
| Tirukkural Couplets By —E. J. Robinson & G. U, Pope | Pl | 5 | 50 |
| | Rex | 11 | 00 |
| Tirukkural—Translation in English —Rev. Drew & John Lazarus | (W) | 6 | 50 |
| | (P) | 8 | 25 |
| Thirukkural with English Couplets—By Yogi Suddhanantha Bharathi | Wr. | 9 | 75 |
| | Pl. | 11 | 00 |
| | Spl. | 14 | 00 |
| Sacred Kural - The Kindly light —K. C. Kamaliah | | 15 | 00 |

## LITERATURE

| | | Rs. | Np. |
|---|---|---|---|
| The Cilappatikaram by Prof V. R. Ramachandra Dikshitar | | 60 | 00 |
| Naladiyar—Dr. G. U. Pope | | 8 | 25 |
| Pattuppattu—J. V. Chelliah, M. A. | | 25 | 00 |
| The Treatment of Nature in Sangam Literature —Dr. M. Varadarajan | | 15 | 00 |
| The Tamil Concept of Love in Ahattinai —Dr. V. Sp. Manickam | | 15 | 00 |
| Sips From The Sangam Cup —A. V. Subramaniam, B.Sc., B.T. | | 10 | 00 |
| The Grand Epic of Saivism —Yogi Suddhananda Bharati | | 15 | 00 |
| Tamil Heroic Poems Dr. G. U. Pope | (w) | 7 | 00 |
| | (c) | 12 | 50 |

## GRAMMAR

| | Rs. | Np. |
|---|---|---|
| The Nannul—Tamil text With English translation | | |
| Pt. I Preface—Rev. H. Bower | 7 | 50 |
| Pt. II Text—Rev. J. Lazarus | 12 | 00 |

## HISTORY

| | Rs. | Np. |
|---|---|---|
| The Tamils Eighteen Hundred Years ago —V. Kanakasabai, B.A., B.L. | 16 | 50 |
| Tamil India —Prof. M. S. Puranalingam Pillai | 12 | 00 |
| Origin and Spread of the Tamils —Prof. V. R. Ramachandra Dikshitar | 6 | 00 |

...பர் அச்சகம், சென்னை-1.